"மீனு... நிலவூறும் உனதழகுக்கு உலகையே தருவேனே!"

# பிறந்த நாள் இன்று... அரும்பெரும் பரிசு ஒன்றை மீனுவுக்கு அளித்துவிட்டது ஃபேர் அண்ட் லவ்லி.

இந்த நாளுக்காகவே மீனா அரு முயற்சி எடுத்திருக்கிறாள். இரு மாத முன்னேற்பாடுகள் — அதில் முக்கியமானது ஃபேர் அண்ட் லவ்லி ஒத்துழைத்த மகிமை. அவள் மேனிமீது வெண்ணிலவைப் பொழிந்துள்ளது இதமாக, இயல்பாக. பரிசுப் பெட்டகத்தை அவளிடம் நீட்டும் ரவி, பால்நிலா முகத்தழகை பருகுகிறான் சக்கரவாகப் பறவை போல். அதை வாங்கும் மீனாவின் இதயம் பாடுகிறது நன்றிக் கீதம் — ஃபேர் அண்ட் லவ்லி க்ரீமுக்கு!

மீனாவைப் போலவே நீங்களும், கவனிக்கத் தக்க சிகப்பழகை அடைந்திட முடியும் ஃபேர் அண்ட் லவ்லி துணையோடு.

**ஒரு முக்கிய விஞ்ஞானக் கண்டுபிடிப்பு...**
ஃபேர் அண்ட் லவ்லி. இயல்பாக உங்களை சிகப்பழகியாக்க இதிலுள்ள ஒப்பற்ற ஃபார்முலா — இரு முக்கிய வழிகளில் வேலை செய்கிறது. ஒன்று: சருமத்தின் அடியாழத்தில் செயல்பட்டு, உடல் கறுக்கும் உள்வினையைத் தடுக்கிறது — வேறெந்த க்ரீமுக்கும் இது இயலாத சாதனை.



மற்றொன்று: இதிலுள்ள இரட்டை ஸன்ஸ்க்ரீன் ஆற்றல், உடல்கறுக்க வைக்கும் சூரிய ஒளியை உட்புகாதபடி தடுத்து நிறம் காத்திடுகிறது. ஆகவே 6 முதல் 8 வாரங்களில் புதிதாக மேலெழும்பும் கொழுந்துச் சருமப் படலங்களில் வெளுமையான சாயல் மிளிரும். அன்றாடம் இருமுறை ஃபேர் அண்ட் லவ்லி — நாள் தவறாமல் உபயோகித்து வந்தால், மென்மை கொஞ்சும் இயல்பான சிகப்பழகு உறுதியாக உமதாகி விடும்.


ஃபேர் அண்ட் லவ்லி துவங்குமுன்


ஃபேர் அண்ட் லவ்லி உபயோகிக்கும் நாட்களில்

**உபயோக முறை:**
கழுவிக் கொண்ட முகம், கழுத்து, கரங்கள் மீது ஃபேர் அண்ட் லவ்லி க்ரீமை பொட்டுப் பொட்டாக இட்ட பின், மேல் நோக்கித் தேய்க்க வேண்டும் மெதுவாக. ஃபேர் அண்ட் லவ்லி, செயல்படத் துவங்கும் போது சற்றே கூசும் உணர்வு ஏற்படுமானால் கவலை வேண்டாம், விரைவில் அது மறைந்துவிடும்.

**எளிதில் உள் உறிஞ்சப்படும்**
குழைவு குணமோங்கி முன்னிலும் மென்மையாக வருகிறது ஃபேர் அண்ட் லவ்லி. ஒரே சீராகப் பரவுகிறது சருமத்தில் மேலும் எளிதில் உறிஞ்சப் படுகிறது.

உடலாரா உணருவீர் இம் மாறுதலை...பிறகு காண்பீர் கண்ணார.

ஃபேர் அண்ட் லவ்லி பற்றி மேலும் கேட்டறிய விரும்பினீரானால் எழுதுங்கள் இம் முகவரிக்கு:
திருமதி கவிதா குமார், ஃபேர் அண்ட் லவ்லி ஆட்வைஸர், பி.ஓ. பாக்ஸ் 758, பம்பாய்-400 021.

ஃபேர் அண்ட் லவ்லி
சிகப்பழகு க்ரீம்




## கண்காணும் சிகப்பழகை உமதாக்கும்... இயற்கைக்கே உரிய இதமான வழியில்

# இவர்கள் புதுக்கவிதை எழுதினால்...?



நாவலர்

நாங்கள்
மூத்த தலைவர்கள் —
கேட்பதெல்லாம்,
முதல் மரியாதை.
கிடைப்பதென்னவோ
அவமரியாதை.



பி. எச். பாண்டியன்

யார் ஜெயித்தாலும்
நான்தான்
சபாநாயகர்.
சட்டசபை சாவி
என் கையில்
சட்டம்
என் பையில்.



காளிமுத்து

என்னைத்
தூக்கில் போட்டாலும்
காங்கிரஸோடு
சேர்ந்துதான்
தொங்குவேன்!

ஜெயலலிதா

ஆட்சி அமைத்தால்
நானே முதல்வர்.
மற்றவர் எல்லாம்
இரண்டாமவர்.
இதை ஏற்றுக்
கொண்டால்
கூட்டணி
இல்லையேல்
வேற்றணி.



எம். பி. எஸ்.

சினிமாவில்
சிவாஜி நிலைமை
சிங்கம்.
அரசியலில்
அவர் தலைமை
அசிங்கம்.



ராஜீவ்

தமிழகத்தில்
தேர்தல்
எப்போது என்று
தெரிந்தால்
சொல்லுங்கள்
காங்கிரஸ் கட்சி
போட்டியிடத்
தயார்.



கற்பனை:
கடுவை
கோபால்சாமி.



* பெத்தூர்தாண்டா கிராமத்தில் மகிளா மண்டலி— லம்பாடா தலைவி தர்மி பேசுகிறார்!

# வழி
# வாழ

காட்சி — I:

ஆழமான கிணற்றிலிருந்து தண்ணீர் இழுத்துக் கொட்டிக் கொண்டிருக்கிறார்கள் ஒரு கிராமத்தில். இழுப்பது யார் தெரியுமா? மாடுகள் அல்ல. இரண்டு பெண்கள். அதிலும் ஒருத்தி கர்ப்பிணி. அவர்களை நுகத்தடியில் இரண்டு பக்கமும் பிணைத்திருக்கிறார்கள். நிலச் சொந்தக்காரர் தலைக்குக் குடை பிடித்துக் கொண்டு சர்வ சாதாரணமாக நின்றபடி மேற்பார்வை பார்த்துக் கொண்டிருக்கிறார்!

"என்ன அநியாயம் இது! என்ன அக்கிரமம் இது! ஏன் இப்படி இவர்களை வதைக்கிறீர்கள்?" என்று துடிதுடித்துப் போய்க் கேட்டால், "மாடுகள் கிடைக்காத சமயத்தில் இப்படித்தான் நாங்கள் செய்வோம். இதில் என்ன தவறு இருக்கிறது?" என்று பதில் கிடைக்கிறது. இது நடப்பது ஆந்திராவிலுள்ள நால்கொண்டாவில்.

காட்சி — II:

ஆந்திராவில், மஹ்பூப் நகர் மாவட்டத்தில் ஒரு கிராமம். ஓர் அரிஜன இளைஞனை, ஏதோ திருடி விட்டான் என்ற சந்தேகத்தின் பேரில், இழுத்துக் கொண்டு போய், ஒரு பக்கம் எருதைக் கட்டி இன்னொரு பக்கம் அந்த இளைஞனைக் கட்டி, நிலத்தை உழுது கொண்டிருக்கிறார்கள் ஒரு பண்ணையாரின் ஆட்கள். அருகே போலீஸ் ஸ்டேஷன் இருந்தும் அரசின் வட்டார வளர்ச்சி அலுவலகம் இருந்தும் இந்தக் கொடுமையைத் தட்டிக் கேட்க ஆளில்லை!

மத்திய அரசில் திட்டக் கமிஷன் அதிகாரியாகப் பணிபுரிந்த மாதவன், தாழ்த்தப்பட்டோர் மற்றும் பழங்குடியினரின் வாழ்க்கை பற்றித் தகவல்கள் சேகரிக்க ஆந்திராவுக்கு வந்த போது கண்ட காட்சிகள்தான் இவை. பணி முடிந்து திரும்பிய பின்னும் அக்காட்சிகள் அவர் மனக்கண் முன் மீண்டும் மீண்டும் தோன்றி அவரை உலுக்கி எடுத்தன.

ஒரு நாள், தமது அரசாங்க வேலைக்கு முழுக்குப் போட்டு விட்டு, கொடுமைகளுக்கு உள்ளாகும் அரிஜனங்களுக்காகவும் இதர தாழ்த்தப்பட்டவர்களுக்காகவும் உழைப்பது, அவர்களுடைய அறியாமையைப் போக்கி, அவர்களுக்குத் தங்கள் உரிமைகளையும் கடமைகளையும் உணர்த்துவது, என்று தீர்மானித்தார் மாதவன் — கிராமப்புற நல்வாழ்வு மற்றும் விழிப்புணர்வு இயக்கம் என்ற பொருள்படும் Action for Welfare and Awakening in Rural Environment (சுருக்கமாக AWARE) என்ற அமைப்பைத் தோற்றுவித்தார்.

* காலே மைசய்யா — "செருப்பு ஒரு ஜோடி 30—லிருந்து 40 ரூபாய்தான்!"



* பி. கே. எஸ். மாதவன்.



# தெரியாதவர்களை
# வைப்பவர்

கோதாவரி நதியில் 'படகு ஆஸ்பத்திரி' — வெள்ளப் பெருக்கின் போது 20,000 பேரைக் கரை சேர்த்தது!



''அரிஜனங்களுக்கும் பழங்குடியினருக்கும் அரசாங்கம் நிறைய செய்து வருகின்றதே.'' என்று 'அவேர்' ஹைதராபாத் அலுவலகத்தில் மாதவனைச் சந்தித்துக் கேட்டோம்.

''வாஸ்தவம்தான். ஆனால் அது அவர்களுக்குப் பயன்படுகிறதா என்று பார்த்தால்.... நிலம் ஏதோ கொடுத்து விடுகிறார்கள் என்று வைத்துக் கொள்வோம். பயிரிட்டு வளமாக்கத் துணைச் சாதனங்களுக்கு அந்த மக்கள் எங்கே போவார்கள். அங்குள்ள செல்வந்தரிடம் நூறு ரூபாய் கடனாகப் பெறும் விவசாயி, அறுநூற்று நாற்பது சதவிதம் வட்டி சேர்த்து, 740 ரூபாயாகத் திருப்பிக் கொடுக்க வேண்டியிருக்கிறது! எப்படிக் கொடுப்பான்? பணம் கொடுத்தவரிடம் நிலத்தை ஒப்படைத்து விட்டு, இருக்கிற சொற்ப வெள்ளி நகைகளையும் கொடுத்து விட்டு, நமக்குக் கொடுப்பினை இவ்வளவு தான் என்று ஒரு பெருமூச்சோடு உட்கார்ந்து விடுகிறான். இதில் என்ன விசேஷம் என்றால், இத்தனைக்குப் பிறகும் இந்த அப்பாவிப் பழங்குடியினர், பணம் தந்த செல்வந்தரைக் கடவுளாக நினைக்கிறார்கள்! ஒரு முன்னேற்றத் திட்டம் வெற்றி அடைய வேண்டுமென்றால் யாருக்காக அது திட்டமிடப்பட்டிருக்கிறதோ, அந்த மக்கள் அதில் பங்கெடுத்துக் கொள்ள வேண்டாமா? அந்தத் திட்டங்கள் பற்றி அவர்கள் அறிந்திருக்க வேண்டாமா? அவர்கள் தங்கள் பிரச்னை பற்றி எல்லாம் அறியாதிருப்பதே ஒரு பெரிய பிரச்னையாக எனக்குப் பட்டது! அதனால்தான் 1975—இல் அச்சம்பேட் என்ற இடத்தில் 'அவேர்' அமைப்பைத் தொடங்கினேன்.

''பிறகு கம்மம் மாவட்டத்தில், நாற்பது பழங்குடி இளைஞர்களைத் தேர்ந்தெடுத்து, அரசு விதைப் பண்ணையில் ஒரு முகாம் ஏற்பாடு செய்தேன். பல மாவட்ட ஆட்சித் தலைவர்கள் என் நண்பர்களாக இருந்ததால் பயிற்சி முகாமிற்கு அரசாங்க அதிகாரிகளை அனுப்பி வைத்தார்கள். முதல் ஒரு மாதப் பயிற்சியின் போது அதிகாரிகள் மட்டுமே பேசிக் கொண்டிருந்தார்கள். பழங்குடியினர் ஏதும் பேசாமல் கேட்டுக் கொண்டிருந்தார்கள். இரண்டாவது மாதம் அவர்கள் என்னை விளக்கம் கேட்கத் தொடங்கினார்கள். மூன்றாம் மாதம் அதிகாரிகளிடமே கேள்விகள் கேட்கத் தொடங்கினார்கள்!

''இதே போல் மற்றக் கிராமங்களுக்கும் செல்ல ஆரம்பித்தேன். மக்களை ஊக்குவித்து, உற்சாகம் கொள்ளச் செய்தேன். மகளிர் அணி, இளைஞர் அணி தவிர, சுகாதார முகாம், சட்ட விளக்க முகாம், கால்நடை மருத்துவ முகாம் என்று பல முகாம்கள் நடத்திப் பயிற்சி கொடுத்தேன். அப்படி ஒரு வருஷத்திலேயே 45,000 பேர் இவற்றில் பயிற்சி பெற்றார்கள். இந்த மக்களை நேரிடையாகப் பாதிக்கும் விஷயங்களைப் பற்றி அவர்களே விவாதிக்க மாதத்தில் நான்கு அல்லது ஐந்து முறை 'மகாசபா' என்னும் கிராம மக்கள் கூட்டங்களை ஏற்பாடு செய்தேன். நாலாயிரம் முதல் ஐயாயிரம் பேர் ஒவ்வொரு கூட்டத்திலும் கலந்து கொண்டு விவாதங்களில் ஈடுபட்டனர். ஒரு கிராமத்தில் 'மகா சபா' நடக்கும் போது, அக்கம் பக்கத்து கிராமங்களிலுள்ள மக்களும் வந்து கலந்து கொள்ளுகிறார்கள். அதனால் பொதுவான பிரச்னைகள் குறித்து ஒரு கிராமத்தில் கண்ட தீர்வு இன்னொரு கிராமத்துக்கும் உதவ வழி

கிடைத்தது. முதன் முதலாக மாநில அளவிலான மாநாடு ஒன்றைக் கூட்டிய போது, சுமார் ஒன்றரை லட்சம் மக்கள் பங்கெடுத்துக் கொண்டனர். 'நீங்களோ அன்றாடக் கூலி வாங்குகிறவர்கள். எதற்கு உங்கள் தினக் கூலியையும் கெடுத்துக் கொண்டு இப்படிக் கூட்டம் கூட்டமாய் வருகிறீர்கள்?' என்று சிலர் கேட்டார்கள். 'நாங்கள் சந்திக்கப் போவது, எங்களைப் போன்ற சாதாரண மக்களை. விவாதிக்கப் போவது எங்கள் அன்றாட வாழ்க்கைப் பிரச்னைகளை.... ஒரு நாள் கூலி போனால் ஒன்றும் எங்களுக்குப் பெரிய நஷ்டமில்லை!' என்று ஆணித்தரமாகச் சொல்லி விட்டார்கள் இந்த ஏழை மக்கள்!

"இந்தக் கூட்டங்கள் மக்களின் சிந்தனையைத் தூண்டி அவர்களுக்கு ஆத்ம பலம் அளித்தன. பழங்குடி மக்களில் ஒரு வகுப்பினரான லம்பாடா பிரிவைச் சேர்ந்தவர்கள் மீது, ஆட்டைத் திருடி விட்டார், மாட்டைத் திருடி விட்டார் என்று குற்றம் சாட்டி, அவர்களைப் பண்ணையார்கள் வதைப்பது வழக்கம். அவை எல்லாம் படிப்படியாகக் குறைந்தன. தெலுங்கானாவில், இந்த அரிஜனங்களும், பழங்குடியினரும் பஸ்ஸில் பிரயாணம் செய்யும் போது, மேட்டுக் குடியினர் ஒருவர் அதே பஸ்ஸில் ஏறி விட்டால், அத்தனை அரிஜனங்களும் பழங்குடியினரும் இருக்கையிலிருந்து எழுந்து கீழே உட்கார்ந்து விட வேண்டும். இதுவும் மாறியது. அரிஜனங்கள் சமைத்த உணவை லம்பாடா உண்ண மாட்டார். அவர்களுக்கிடையே இருந்து வந்த பேதமும் இப்போது மறைந்து விட்டது!"

'அவேரி'ன் பணிகளை நேரில் சென்று பார்த்த போது பிரமிப்பாக இருந்தது:

- ஆடு–மாடுகள் மேய்த்து, வயலில் வேலை செய்த நேரம் போக மீதி நேரத்தில் பள்ளிக்குச் செல்லும் குழந்தைகளுக்குக் கூடுதலாக, தனிக் கல்வி வசதி செய்து கொடுக்கப்பட்டிருக்கிறது.

- வங்கிக் கடன்கள், கொத்தடிமை, ஆண்களுக்கும் பெண்களுக்கும் சமமான கூலி, இவை பற்றிய உரையாடல் கூட்டங்களில் அக்கறையோடு கிராமவாசிகள் கலந்து கொள்கின்றனர்.

- கிடைக்கும் பணத்தில் குடித்து விட்டுக் கிடந்த கதை, இதுவரை 1500 கிராமங்களைப் பொறுத்தமட்டில் பழங்கதை ஆகி விட்டது. கூலிப் பணம் எப்படிச் செலவாகிறது என்று அறிந்து, அந்த ஓட்டைகளை அடைக்கா விட்டால், ஏழைமையை நிச்சயம் ஒழிக்க முடியாது என்பதை உணர்ந்ததன் காரணமாக, விழிப்பு உண்டாயிற்று. கிராமவாசியின் பொருளாதார நிலை சீரடைந்தது. வீட்டுக்குக் கூரை, குழந்தைகளுக்கு உணவு–உடை, வாங்கிய கடனைத் திருப்பிக் கொடுக்கும் சக்தி எல்லாம் நிதர்சனமான உண்மைகளாயின. எல்லா அக்டோபர் 2–ஆம் தேதியும் குடி மறுப்பு நாளாகக் கொண்டாடப்பட்டு, ஐந்து ரூபாய்ப் பத்திரத் தாளில் எழுதிக் கையெழுத்திட்டுச் சபதம் செய்தார்கள். எப்போதாவது குடித்துப் பிடிபட்டால் தண்டனையாகக் கட்டணம் செலுத்த வேண்டியதுதான்! இன்னார் குடிக்கிறார் என்று தகவல் சொல்லுகிறவருக்குக் கூடப் பரிசு உண்டு. ஐந்தே வருடங்களில் இந்த மக்களின் வாழ்க்கை நிலையில் பிரமிக்கத்தக்க மாற்றம் ஏற்பட்டது.

- சுவர் ஒட்டிகள், பயிற்சி முகாம்கள், அறிவுறுத்தல் கூட்டங்கள் மூலம் விழிப்புணர்ச்சி ஏற்படுத்தி, இதுவரை சுமார் ஆறாயிரம் கொத்தடிமைகளை மீட்டு, அவர்களுக்கு மறுவாழ்வு அளித்திருக்கிறது 'அவேர்'. அதுமட்டுமல்ல. அதன் நேர்மை

• கர்த்தால் கிராமத்தில், நரசய்யா—நரசம்மா தம்பதி "ஏழு வருடங்களுக்கு முன் கிடைத்த கடன் மூலம் இன்றைக்கு இருபத்தேழு ஆடுகள்!"




• படக்கல் கிராமத்து கம்யூனிடி ஹெல்த் சென்டர்.






* FICCI பரிசு பெறுகிறார் மாதவன்.



* படக்கல் கம்யூனிடி ஹெல்த் சென்டரில் சுகாதாரப் பாடம் நடக்கிறது.

யான வழி வகைகளையும், நோக்கத்தையும் உணர்ந்த சுப்ரீம் கோர்ட், இனி கொத்தடிமைகளை விடுவிக்கும் விழிப்புணர்வுக் குழுக்களில் 'அவேர்' அமைப்பின் உறுப்பினர் ஒருவர் கட்டாயம் இடம் பெற வேண்டும் என்று மாநில அரசுக்கு உத்தரவிட்டிருக்கிறது!

* பழங்குடியினரிடமிருந்து முறைகேடாக அபகரித்துக் கொண்ட நிலங்கள் சம்பந்தமாக, 10,000 வழக்குகளை 'அவேர்' அமைப்பின் சட்ட ஆலோசகர்கள் வெற்றிகரமாகக் கையாண்டு, திரும்பப் பெற்றுக் கொடுத்திருக்கிறார்கள். சுமார் எட்டாயிரம் ஏக்கர் நிலம் இது மாதிரி திரும்பக் கிடைத்திருக்கிறது.

* ஐந்து சுகாதார—மருத்துவ நிலையங்களை நிர்வகித்து வருகிறது 'அவேர்'. அதில் ஒன்று கோதாவரி நதியில் மிதக்கும் 'படகு ஆஸ்பத்திரி'. பிரசவ அறை, ஆபரேஷன் தியேட்டர், லாபரெடரி, இரண்டு டாக்டர்கள், நர்ஸ்—என்று இந்தப் படகு ஆஸ்பத்திரி இயங்குகிறது. ஒரு நாள் நதியின் ஒரு கரையிலுள்ள கிராமங்களுக்குப் போனால், மறு நாள் மறு கரையிலுள்ள கிராமங்களுக்கு விஜயம் செய்யும். இது தவிர, தொழு நோய் ஆஸ்பத்திரி; சத்துணவுக்கு முக்கியத்துவம் கொடுத்துச் சிகிச்சையளிக்கும் ஆஸ்பத்திரி; சுற்றுப்புறச் சுகாதாரச் சூழலை வற்புறுத்தும் ஆஸ்பத்திரி; சுகாதாரப் பயிற்சியாளர்களை உருவாக்கும் மருத்துவமனை என்று மொத்தம் ஐந்து சிகிச்சை நிலையங்கள். கிட்டத்தட்ட ஒன்றரை லட்சம் மக்களின் மருத்துவ வசதிகளை இந்த ஐந்து மருத்துவமனைகளும் கவனித்துக் கொள்கின்றன.

* அசுவராவ்பேட்டில் வருஷத்துக்கு 140 பழங்குடி—ஹரிஜன மாணவர்கள் படிக்கும் வசதி கொண்ட தொழில் நுட்பப் பள்ளியில், இரண்டு ஆண்டுப் பயிற்சி அளிக்கப்படுகிறது. இந்திய அரசு அங்கீகரித்துள்ள தொழில் பள்ளி இது.

* பொருளாதார மேம்பாட்டுத் திட்டத்தின் கீழ், கிணற்றை ஆழப்படுத்த, கால்நடைகள் வாங்க, நிலத்தைச் சீராக்க, மின்சார மோட்டார் வாங்க, உரம் வாங்க, என்று வட்டியில்லாக் கடன்கள் கொடுக்கப்படுகின்றன. எதுவும் இலவசமாகக் கொடுப்பது கிடையாது. நல்ல சீசனில் 94% திரும்ப வந்து விடும். மோசமான வறட்சி சமயங்களில் கூட 76% திரும்பக் கிடைத்து விடும். சுமார் இரண்டு கோடி ரூபாய் இதற்காகச் சுழல் நிதியாக வைத்திருக்கிறார்கள். நாம் திருப்பித் தரும் பணம் இன்னொருவரின் மேம்பாட்டுக்கு உதவப் போகிறது என்ற எண்ணம் வேரூன்றியுள்ளது. ஏழைகள் என்றால் நாணயமற்றவர்கள் அல்ல என்பதை இது காண்பிக்கிறது.

* கிராமச் சங்கங்களை உருவாக்கி, ஒவ்வொரு கிராமத்துக்கும் ஒரு தலைவரைத் தேர்ந்தெடுக்கிறார்கள். கிராமத்தினர் எல்லாரும் இதில் உறுப்பினர்கள். இருபது கிராமங்களை ஒரு கூட்டாகச் சேர்த்து, 'க்ளஸ்டர்' எனப் பெயரிட்டு, க்ளஸ்டர் சர்வீஸ்



* தட்டுத் தட்டாக இலைத் துண்டுகளும் பட்டுப் புழுக்களும்.

சொசைடி உருவாக்கியிருக்கிறார்கள். பத்து லட்ச ரூபாய் ஒரு 'க்ளஸ்ட'ருக்கு பட்ஜெட் என்றால், மூன்று அல்லது நாலு லட்ச ரூபாயை 'அவேர்' கொடுக்கிறது. மீதியை வங்கிகள் அல்லது அரசின் சமூக நலத்துறை (DRDA) மூலமாக வாங்கிக் கொள்ள உதவுகிறார்கள்.

• எந்த கிராமத்திலும் பத்து வருடங்களுக்கு மேல் 'அவேர்' தங்குவதில்லை. அப்புறம் ஒரேயடியாக அவர்களையே நம்பி, சார்ந்து நிற்கும் அளவுக்குக் கிராமவாசிகள் ஆகிவிடக் கூடாதல்லவா? இதுவரை சுமார் 109 கிராமங்களிலிருந்து 'அவேர்' தன் பணியை வெற்றிகரமாக முடித்து விலகிக் கொண்டிருக்கிறது.

• புயல், வெள்ளப் பெருக்கு இவற்றின் போது எல்லாம் சாகசமாகப் பணியாற்றித் துயர் துடைக்க, பயிற்சி பெற்ற 300 இளைஞர்கள் இருக்கிறார்கள். 1986—ல் கோதாவரி வெள்ளப் பெருக்கின் போது, மாதவனே பல இடங்களுக்கு முழங்கால் அளவு நீரில் சென்று உதவியிருக்கிறார். ஒரு கரையிலிருந்து இன்னொரு கரைக்கு "பாட்டரி" எடுத்துச் சென்று, தகவல் தொடர்பு துண்டித்துப் போகாமல் இருக்க இவர் மேற்கொண்ட அசாதாரணமுயற்சியை ஆந்திர அரசு பாராட்டி அதற்காக இவரைத் தனியே கௌரவித்தது.

• ஹைதராபாதிலிருந்து சுமார் எண்பது கிலோ மீட்டர் தூரத்தில் உள்ள அமங்கல் கிராமத்தில் மருத்துவமனை, சுகாதாரப் பயிற்சி மையம், கலம்காரி ஓவியப் பயிற்சி பள்ளி ஆகியன உள்ளன. ஹைதராபாத்திலிருந்து சுமார் 25 கி.மீ. தூரத்தில் பகவதிபுரம் மனித ஆற்றல் மேம்பாட்டு மையத்தில் உறுப்பினர்கள், கிராமவாசிகள் தங்கியிருந்து விவசாயப் பயிற்சி பெறுகின்றனர்.

• நெதர்லாந்திலுள்ள 'நோவிப்' நிறுவனமும், ஆஸ்திரேலிய உதவிச் சங்கமும், மத்திய அரசும், மாநில அரசும் தரும் நிதியுதவி தவிர, ஆண்டுதோறும் டயரிகள் (அதிலுள்ள விளம்பரங்கள்) மூலமாகவும், பணம் திரட்டுகின்றனர். இவர்கள் நோக்கங்களைப் பறைசாற்றும் வாசகங்கள் கொண்ட பனியன்களை விற்றும், லாட்டரி நடத்தியும், இவர்கள் நடத்தும் பயிற்சிப் பள்ளிகளில் தயாராகும் பொருட்களை விற்றும் நிதி சேர்க்கின்றனர். ஆண்டுக்குச் சுமார் மூன்று கோடி ரூபாய் பட்ஜெட்டை 'அவேர்' நிர்வகிக்கிறது. 1995—க்குப் பிறகு வெளிநாட்டு உதவி எதையும் எதிர்பார்க்காத அளவுக்கு, 'அவேர்' நிதி நிலைமை அபிவிருத்தி அடையும் என்று எதிர்பார்க்கப்படுகிறது.

• 'அவேர்' அமைப்பில் இன்று 700 முழு நேர ஊழியர்கள், 1200 பகுதி நேர ஊழியர்கள், 30,000 தொண்டர்கள், பத்து லட்சம் கிராமவாசி உறுப்பினர்கள் இருக்கிறார்கள். சேவை மனப்பான்மை கொண்ட ஊழியர்களுக்கு நல்ல சம்பளம் தரப்படுகிறது. நாற்பது சதவீத ஊழியர்கள் பட்ட மேற்படிப்புப் படித்தவர்கள். பலர் அரசுப் பணியிலிருந்து ஓய்வு பெற்றவர்கள். முழு நேர வழக்கறிஞர்கள், மருத்துவர்கள், பொறியியலாளர்களும் உண்டு.

• ஆந்திராவில் 2000 கிராமங்களிலும், ஒரிசாவில் ஐந்நூறு கிராமங்களிலும், கேரளாவில் வயநாட்டிலும், தமிழ்நாட்டில் கல்ராயன் மலை, கூனூரிலும், கர்நாடகாவில் ரெய்ச்சூரிலும், உத்தரப்பிரதேசத்தில் மிர்ஜாபூரிலும் 'அவேர்' பணியாற்றுகிறது.

"பல பெரிய மனிதர்களுக்கும், பண முதலைகளுக்கும் எதிரியாக இருப்பதால் மாதவனைத் தீர்த்துக்கட்ட ஏழு முறை முயற்சிகள் நடந்திருக்கின்றன. அத்தனையிலும் தெய்வாதீனமாகத் தப்பினார் மாதவன்!" என்றார்கள். அவேர் ஊழியர்கள்.

தம்முடைய பணிக்காக ஒரு பைசா கூட 'அவேர்' அமைப்பிலிருந்து பெறுவதில்லை மாதவன். இவரது சொந்த நிலத்திலிருந்து கிடைக்கும் பணத்தை அவ்வப்போது, ஓர் உறவினர் அனுப்பி வைக்கிறார். இவருக்கும், இவருடன் வசிக்கும் இவரது தாயாருக்கும் செலவுக்கு இதுதான் உதவுகிறது.

மூவாயிரம் கிராமங்களைச் சேர்ந்த ஐந்து லட்சம் மக்களின் வாழ்வை மேம்படுத்தியதற்காக FICCI 'அவேரு'க்குப் பாராட்டும் விருதும் அறிவித்தது. அதை வாங்கிக் கொள்ள மாதவன் விரும்பவில்லை. பின்னர் ஊழியர்கள் வற்புறுத்தியதன் காரணமாக நேரில் சென்று பெற்றுக் கொண்டார். இதனை அவேர் ஊழியர்களே தெரிவித்தனர். மாதவனிடம் இதைப் பற்றிக் கேட்ட போது, "குடித்து விட்டுச் சட்டை வேட்டி இல்லாமல் கீழே கிடந்த பழங்குடி, அரிஜனப் பாமரன், இன்று என் அருகேயே நாற்காலியில் உட்கார்ந்து பேசுகிறானே, இதை விடப் பெரிய பரிசும் பாராட்டும் இருக்க முடியுமா....?" என்றார்.

பேட்டி, கட்டுரை: **சாருகேசி.**

அட்டை வண்ணப்படமும், புகைப்படங்களும்: **கே. வி. ஆனந்த்.**

## கும்பாபிஷேக நன்கொடை வேண்டுகோள்

திருச்செந்தூர் அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோவிலுடன் இணைந்த குலசேகரன்பட்டினம் அருள்தரும் அறம்வளர்த்தம்மன் உடனுறை அருள்மிகு காஞ்சி விஜயகச்சிகொண்ட பாண்டீசுவரர் திருக்கோவில் குடமுழுக்கு விழா (மகா கும்பாபிஷேகம்) 19.8.88 வெள்ளிக்கிழமை காலை 8.15-க்கு மேல் 9.00-க்குள் சிறப்பாக நடைபெற எல்லா ஏற்பாடுகளும் செய்யப்பட்டு வருகின்றன.

ஆன்மீக மெய்யன்பர்கள் கும்பாபிஷேக திருப்பணிக்கு தங்களாலியன்ற பொருளுதவியினை மணியார்டராகவோ, காசோலை அல்லது வரைவோலை (டிமாண்ட் டிராப்ட்) மூலமாகவோ "துணை ஆணையர்/நிர்வாக அதிகாரி, அருள்மிகு சுப்பிரமணியசுவாமி திருக்கோவில், திருச்செந்தூர் - 628 215, சிதம்பரனார் மாவட்டம்" என்ற முகவரிக்கு அனுப்பி அன்னையின் திருவருள் பெற்றுய்யக் கேட்டுக் கொள்கிறேன்.

எஸ். கனகய்யா, பி.எஸ்ஸி, பி.எல்.,
தக்கார்/துணை ஆணையர்/நிர்வாக அதிகாரி



• நடராஜன்

# கட்சியை உடைக்கும் தம்பதி



• சசிகலா

தனிப்பட்ட நண்பர்களுக்காகக் கட்சியின் மூத்த தலைவர்களையே பகைத்துக் கொண்டிருக்கிறார் ஜெயலலிதா. இந்தப் பிரிவு தற்காலிகமானதா அல்லது நிரந்தரப் பிளவா என்பதைப் பொறுத்திருந்து பார்க்க வேண்டும்.

ஜெ. கோஷ்டித் தலைவர்கள் – தொண்டர்கள் ஆகியோரின் வெறுப்பை ஆரம்பம் முதலே சம்பாதித்துக் கொண்ட நடராஜன்–சசிகலா தம்பதி, எம்.ஜி.ஆர்., ஜெயுடன் மீண்டும் தொடர்பு கொண்ட காலகட்டத்திலிருந்தே (அதாவது 1982–ல் இருந்து) ஜெயுடன் நெருக்கமாக இருந்து வருகிறவர்கள்தாம். நடராஜன் 1969–ல், தி.மு.க. ஆட்சியிலிருந்த போது மக்கள் தொடர்பு அதிகாரியாக வேலைக்கமர்ந்து படிப்படியாக முன்னேறித் துணை டைரக்டர் மட்டத்திற்கு உயர்ந்து விட்டார். இவர் தி.மு.க. சார்புடையவர் என்பது திருநாவுக்கரசின் குற்றச்சாட்டு. நடராஜன் அரசுப் பணியில் சேரச் சிபாரிசு செய்தவர் எஸ். டி. சோமசுந்தரம். எஸ்.டி.எஸ்.ஸின் ஆட்சி, போயஸ் தோட்டத்தில் கொடி கட்டிப் பறப்பதற்கான காரணம் புரிகிறதா? கூத்தா நல்லூரைச் (தஞ்சை மாவட்டம்) சேர்ந்த சசிகலாவின் பெற்றோர் சென்னையிலேயே தங்கிவிட்டவர்கள் – என்றாலும் அவர் சகோதரன் டாக்டர் விநோதன் கூத்தாநல்லூரில் சிறு மருத்துவமனை ஒன்றை நடத்தி வருகிறார்.

சசிகலா காலை பத்து மணி முதல் மாலை எட்டு மணி வரை போயஸ் தோட்டத்தில்தான் இருப்பார். அம்முவுக்குச் சொல்ல வேண்டிய பல விஷயங்களை சசிகலா மூலம்தான் எம்.ஜி.ஆர். சொல்லுவாராம். காரணம், ஜெ. எடுத்தவுடன் எடுத்தெறிந்து பேசும் குணமுடையவர் என்பது தான். 1983 வாக்கில் எம்.ஜி.ஆருடன் ஏற்பட்ட ஒரு பிணக்கில் கோபித்துக் கொண்டு "கர்நாடகாவில் போய் செட்டில் ஆகப் போகிறேன்" என்று வீட்டை விற்று விட்டார் ஜெயலலிதா. இதைக் கேள்விப்பட்ட எம்.ஜி.ஆர். வீட்டை வாங்கிய பார்ட்டியை, சசிகலா மூலம் தொடர்பு கொண்டு ஜெ.க்கு வீட்டை மீட்டுத் தந்தார்.

நோயில் விழுவதற்கு ஒரு நாள் முன்பு எம்.ஜி.ஆர்., நடராஜன்–சசிகலா தம்பதியைக் கூப்பிட்டு, 'இனி நீங்கள்தான் அம்முவைப் பார்த்துக் கொள்ள வேண்டும்' என்று கூறி சத்தியம் வாங்கிக் கொண்டார்.

கட்சி ஆரம்பித்தவுடன் ஜெ. பல

மாவட்டங்களுக்குச் சென்றார் அல்லவா, அப்போது துணையாகச் சென்றவர் சசிகலாதான். கட்டும் ஆடையிலிருந்து, எப்படி கையை ஆட்ட வேண்டும் என்பது வரை சொல்லித் தருகிறவர்கள் நடராஜன்—சசிகலா தம்பதிதான் என்று நம்ப இடமிருக்கிறது. பள்ளியில் படிக்கும் காலத்திலிருந்தே நெருங்கிய தொடர்பு கொண்டுள்ள சசிகலாவை ஒருநாளும் விட்டு விட ஜெ. தயாராக இல்லை. நடராஜனோ ஏப்ரல் மாதத்திலிருந்தே மெடிக்கல் லீவில் இருக்கிறார். ஆகஸ்ட் முதல் தேதி பணியில் சேர வேண்டும். இதற்கிடையில் இவர் பெயர் பலமாகப் பத்திரிகைகளில் அடிபட ஆரம்பித்ததும் அரசு விழித்துக் கொண்டு ஒரு 'ஷோகாஸ்' நோட்டீஸ் விடப் போகிறது. ஆனால் நடராஜன் பணியில் சேராமல் விடுப்பை நீடித்துக் கொண்டு போவார் என்று தெரிகிறது.

சமீபத்தில் மீனம்பாக்கத்தில் உள்ள ஒரு நட்சத்திர ஹோட்டலில் தங்கிக் கொண்டு, வேட்பாளராக நிற்க விரும்பும் பலரைச் சந்தித்து நடராஜன் பணம் வசூலித்திருப்பதாக எதிர் அணியினர் கூறுகின்றனர். கட்சிப் பணத்துக்குக் கணக்குகள் கேட்கின்றனர்.

எம்.பி. சுப்பிரமணியத்தையும், மார்க்ஸிஸ்ட் கம்யூனிஸ்ட் கட்சியைச் சேர்ந்த சிலரையும் சந்தித்துப் பேசியிருக்கிறார் நடராஜன். பண்ருட்டி — நெடுஞ்செழியன் — திருநாவுக்கரசு கோஷ்டி தனியாகப் பிரிந்து போனாலும், மார்க்ஸிஸ்ட் கட்சியைத் தி.மு.க.விலிருந்து பிரித்தும், வி. பி. சிங் இயக்கத்துடன் தொடர்பு கொண்டும் தம்மைப் பலப்படுத்திக் கொள்ளலாம் என்று ஜெ. கருதுவதாகத் தெரிகிறது.

முஸ்லீம் லீக் வேட்பாளர்களை முறியடிப்போம் என்று மார்க்ஸிஸ்ட் கட்சி கூறியுள்ளது. லீக், தி.மு.க.வுடன் தேர்தல் உடன்பாட்டில் இருக்கிறது என்பது குறிப்பிடத் தக்கது.

கணக்கு வழக்குகள் எல்லாம் ஒழுங்காக இருக்கிறதென்றால் அதனைத் "திறந்த புத்தகம்" என்று பகிரங்கமாக அறிவித்து விட்டுப் போகலாம். அதைவிடுத்து 'நாயே, பேயே' என்று ஆரம்பிக்கும் போது ஜெயலலிதா தமது எதேச்சாதிகார ஆணவப் போக்கையே மீண்டும் வெளிப்படுத்துகிறார். இத்தகையவருடன் கூட்டுச் சேர்ந்து கொண்டு தமிழகத் தேர்தலைச் சந்திப்பது என்பது காங்கிரஸ் செய்யக் கூடிய ஓர் இமாலயத் தவறு என்பது அதற்கு இப்போதாவது உறைத்தால் நல்லது. அதன் தலையெழுத்து எப்படியிருக்கிறதோ, பார்ப்போம்.

— லம்பாஜி

# எப்படிச் சென்றடையும்...?

* மாண்புமிகு பிரதமர் அவர்களுக்கு அறிவுரையாக—புத்திமதியாக இல்லாமல் அன்புரையாய்ச் சொல்லி எழுதப்பட்டிருந்த தலையங்கம் சிறப்பாக இருந்தது.

பெங்களூர் — 21. ப. மூர்த்தி.

* ராஜீவின் சுற்றுப்பயணங்கள்தான் கட்சியைப் பலப்படுத்த உதவுமெனில் பேஷாக வரட்டும். ஆட்சேபணையொன்றுமில்லை. ஆனால், பிரதமருக்குப் பாதுகாப்பு என்ற பெயரில் அதிகாரிகள் செய்யும் கெடுபிடிகள்தான் மக்கள் மனத்தில் முதலில் நிற்கின்றன. பின் எப்படி இவர்களின் பேச்சுக்கள் மக்களிடத்தில் சென்றடையும்?

கோவை. பி. முகிலன்.

* ''கல்கி'' பத்திரிகையின் சிறப்புச் செய்தியாளர் என்று சொல்லிக் கொண்டு பேரணாம்பட்டு வெங்கடேசன் என்பவர் நம்முடைய பகுதிகளுக்கு ''ரீ—விசிட்'' வந்திருப்பதாகக் கூறிப் பொதுமக்களைச் சென்ற வாரம் ஏமாற்ற முயன்றிருக்கிறார், இவரை ''அடையாள அட்டை'' காட்டுமாறு பொது மக்கள் கேட்கையில், 'விட்டு விட்டு வந்து விட்டேன்' என்று கூறித் தப்பிச் சென்றுள்ளார். பின்னர் இவரைப் பற்றி விசாரித்ததில் இவ்வாறு தம்மைப் பல பத்திரிகைகளின் ''சிறப்பு நிருபர்'' என்று சொல்லி ஆங்காங்கே மக்களை ஏமாற்றிப் பணம் பறிப்பது வழக்கமென்று தெரிய வருகின்றது. தங்கள் வாசகர்களும், பொது மக்களும் இவரிடம் ஏமாறாமல் இருக்கும் பொருட்டு இதனை எழுதுகிறேன்.

வாணியம்பாடி (வ. ஆ) க. சிவப்பிரகாசம்.

* உண்மை என்றைக்காவது வெல்லும் என்ற தத்துவத்தைப் 'பற்றுக்கோல்' சிறுகதையில் மிக அழகாகத் தெளிவுபடுத்தியுள்ளார் சுப்ர.பாலன்.

கரூர் — 4. எம். ராதிகா.

* மக்களின் வரிப் பணத்தை விழுங்கி ஏப்பம் விட்டவர்களை இனம் காண வைத்ததின் மூலம், நம் நாட்டிற்கு அரிய சேவையே செய்திருக்கும் என். ராம் அவர்களின் பேட்டிக் கட்டுரைக்கு நீங்கள் சூட்டியிருந்த தலைப்பு—போஃபோர்ஸ் ஊழலைத் தகர்க்கும் ஹிந்து பீரங்கி—பொருத்தமே!

கல்யாணம்கிறது நிகழ்கால எதிர்கால வாழ்க்கைக்கு மட்டும்தான் பொறுப்பானது. 'கடந்த காலத்தை உரசிப் பார்க்க யாருக்குமே உரிமை கிடையாது.' அற்புதமான... யோசிக்க வைக்கும் வரிகள் மனத்தில் பீடம் போட்டு அமர்ந்து விட்டன! மும்தாஜ் யாசீன் அவர்களுக்கும் பாராட்டுக்கள்!

திருத்துறைப்பூண்டி — 16. ஜெ. பிஸ்மி.

* 'தமிழக அரசின் உண்மையான நிதி நிலைமையை கார்ட்டூன் போட்டு நிதர்சன நிலையை விளக்கிய ஒரே பத்திரிகை கல்கி மட்டும்தான் என்பதை நடுநிலையுடன் ஒப்புக் கொள்ளத்தான் வேண்டும்.

சிதம்பரம். ஆர். தமிழரசி தேவசேனாபதி.

* அட்டைப்படச் செய்திக் கட்டுரை பிரமாதம். கண் தானம் செய்ய வேண்டிய முறை, மற்றும் பல செய்திகளை வழங்கி, என்னைப் போன்றோரைக் கண் தானம் செய்ய ஊக்குவித்தமைக்கு நன்றி!

சூலூர். எஸ். ஏ. மயில்சாமி.

* 10.7.88 இதழ் அட்டைப்பட அறுவைச் சிகிச்சைக் காட்சி மிகவும் தத்ரூபமாக, ஆங்கிலப் படங்களில் பார்ப்பது போன்று அமைந்திருந்தது.

பழனி — 15. கி. நாகராஜன்.

* 'விழிலை மாற்றும் விழி தானம்' கட்டுரை பயனுள்ளதாக இருந்தது. மாற்றுக் கண் வைக்க அதிகச் செலவாகுமோ என்று பயப்படும் மக்கள் இக்கட்டுரையைப் படித்துப் பயனடையட்டும். மற்றும் இச்சிகிச்சை கோவை மாவட்டத்திலுள்ள சங்கரா மருத்துவமனையில் செய்யப்படுகிறது என்பது என்னைப் போன்றவர்களுக்குப் புதிய செய்தி.

குன்னூர். ரவிச்சந்திரன்.

* தங்களுடைய 3.7.88 — ஆம் தேதி இதழில் கடைசி பக்கத்தில் திரு. லம்பாஜி எழுதிய விமர்சனத்தைப் பார்த்தேன். விமர்சனம் செய்வது உங்கள் உரிமை. அதுபற்றி எந்தக் கருத்தும் கூற விரும்பவில்லை. ஆனால் இல்லாத ஒன்றை, உண்மைக்குப் புறம்பானதை, விஷமத்தனமானது என்று மறுக்கப்பட்ட ஒரு செய்தியை, மறுப்பு வெளிவந்தவுடன் முடிந்து விட்ட ஒரு விஷயத்தைத் தாங்கள் உண்மை என்று தோன்றும் வகையில் வெளியிட்டு இருப்பதைக் கடுமையாக ஆட்சேபிக்கிறேன். நான் குறிப்பிடுவது கீழ்க்கண்ட வார்த்தைகளை:

''பிறகு, செருப்பை வேண்டுமென்றால் போட்டுக் கொள்வேன் வேண்டாவிட்டால் கழற்றி எறிவேன் என்று ப. சி. கூறப்போக, நெடுஞ்செழியன், 'மரியாதை தெரியாது என்றால் என்னிடம் வந்து கற்றுக் கொள்' என்றார்.''

பத்திரிகைகள் வாயிலாக நான் வெளியிட்ட தெளிவான மறுப்பை திரு. லம்பாஜி அவர்களோ, தாங்களோ படிக்கவில்லை என்பதை என்னால் நம்ப முடியவில்லை.

புதுதில்லி — 1. ப. சிதம்பரம்.

* பொது இடத்தில் ஒட்டல் கட்டுவதற்குக் 'கல்கி' ஆட்சேபணைக் கடிதம் அனுப்பியதானது, அது எப்பொழுதும் பொது மக்களின் நலனைக் கருத்தில் கொண்டு செயல்படுவதை மீண்டும் நிரூபித்து விட்டது. பொது மக்களுக்குத் தெரியவராத விவரங்களைக் கூடக் கடிதத்தில் குறிப்பிட்டது பாராட்டுக்குரியது. பொது மக்களின் நலன் காக்கப்படுமானால் அதில் கல்கியின் பங்கு நிச்சயமாக இருக்கும்.

சென்னை — 33. வி. எஸ். வாசன்.





ரஷ்யாவில் இந்தி படித்த ராஜீவின் உரை



ரஷ்யா புறப்படும் போது ஜம்னு போனீங்க.. திரும்பி வரும் போது இப்படி ஆயிட்டீங்க?
சஞ்சீவ ரெட்டி



1985ல்...
ASLV
ராஜீவ்



1988ல்
ASLV
ராஜீவ்



இந்த ஜென்மங்களோட கூட்டு சேரணும்னு சொல்றீங்களா?
மூப்பனார்
பூசாரி



இன்னம்மோவ்! கட்டெல்லாம் வாரி கிட்டு கீறே?... கணக்கு காட்டு.. கணக்கு..!
திருநாவுக்கரசு
சர் தான் போடா நாயே!... அதெ கேக்க நீ யார்டா?
ஜெயலலிதா



# கல்கி

1988 ஜூலை 24
மலர் 46 இதழ் 52
விபவ ஆடி 9



## கருணாநிதி கூறியதும், கூறாமல் விட்டதும்!

'அரசு ஊழியரின் வேலை நிறுத்தத்தைத் தூண்டி விட வேண்டாம்' என்று கருணாநிதியை எச்சரித்தார் ப. சிதம்பரம். கருணாநிதி தூண்டி விடுகிறாரோ இல்லையோ, தம் அனுதாபமெல்லாம் வேலை நிறுத்தம் செய்யும் அரசு ஊழியர் பக்கம்தான் என்பதைத் தெளிவாக்கி விட்டார்! 'நாங்கள் பதவிக்கு வந்தால் மத்திய அரசு ஊழியர்களுக்கு இணையான ஊதியத்தை மாநில அரசு ஊழியர்களுக்கு வழங்குவோம்' என்றும், 'இன்று ஒழுங்கு நடவடிக்கை எடுத்து வீட்டுக்கு அனுப்பப்படுகிறவர்களை மீண்டும் பணியில் அமர்த்துவோம்' என்றும் கருணாநிதி அறிவித்து விட்டார். 'இது தேர்தலை முன்னிட்டு வெளியிடப்படும் கருத்து' என்று யாராவது முத்திரை குத்திவிடப் போகிறார்களே என்பதற்காக, 'ஒரே ஊதியக் கருத்து இன்று புதிதாகக் கூறப்படுவதல்ல; வெகு காலம் முன்பே நாங்கள் சொல்லியிருக்கிறோம்' என்றும் விளக்கியிருக்கிறார்.

தமிழக அரசின் மோசமான நிதி நிலைமை, பற்றாக்குறை பட்ஜெட் என்றெல்லாம் நாம் சுட்டிக் காட்டினால், மத்திய அரசின் அதைவிடப் பற்றாக் குறை பட்ஜெட்டைக் கருணாநிதி எடுத்துக் காட்டுவார். மத்திய அரசின் வருவாய் மிக அதிகம் என்று நாம் வாதிட்டால், மாநில அரசின் வரி வருவாயும் கடந்த பல ஆண்டுகளில் மிகவும் அதிகரித்திருப்பதைத் தி.மு.க. தலைவர் நமக்கு அறிவுறுத்துவார். 'மத்திய அரசு ஊழியர்களின் பணி மிகவும் முக்கியமானது' என்று யாரும் பேச முடியாது; 'மாநில அரசு ஊழியர்களின் பணி அதைவிட முக்கியமானது' என்று அடித்துக் கூறப்படும்! 'ஒரே மாதிரி வேலைக்கு ஒரே ஊதியம்' என்று கோஷம் எழுப்பப்படும்.

'அரசு ஊழியர்களின் வேலை நிறுத்தம் அவர்களுக்கே பாதகமானது; ஏனெனில், இதனால் மாநில அரசின் நிதி நிலைமை மேலும் மோசமாகும்; பிறகு கூடுதல் சம்பளம் எப்படித் தருவதாம்?' என்ற ஸி.எஸ்.ஸின் கூற்றை ஒதுக்கித் தள்ளி விடுவார்கள். 'வேலை நிறுத்தம் செய்ய நாங்கள் ஆசைப்படவா செய்கிறோம்? தமிழக அரசின் பிடிவாதம் அல்லவா வேலை நிறுத்தம் நீடிக்க வழி வகுக்கிறது' என்று ஒரே போடாகப் போடுவார்கள்!

இந்த வாதங்களெல்லாம் செல்லாது. கஷ்டம் எல்லாருக்கும் இருப்பது போல் அரசு ஊழியர்களுக்கும் உள்ளது. விலைவாசி உயர்வைக் கட்டுப்படுத்துவது ஒன்றே வழி. இதைச் செய்தால், கூடுதல் ஊதியம் யார் கேட்டாலும் மறுப்பதற்கு நியாயமான காரணம் இருக்கும். அரசு இதனை நன்குணர்ந்து, சிறந்த பொருளாதாரக் கொள்கை வகுத்துத் தீவிர நடவடிக்கை எடுக்காத வரை, விலை உயர்வும் சம்பள உயர்வும் ஒன்றையொன்று துரத்தி, வட்டமடித்துக் கொண்டுதானிருக்கும்.

தனியார் துறையில் தேவைக்கு அதிகமாக ஆட்கள் இருக்க மாட்டார்கள். இருக்கிறவர்கள் நன்றாக வேலை வாங்கப்படுவார்கள். ஆனால் அரசு அலுவலகங்களிலும் அரசுத் துறைத் தொழிலகங்களிலும் இல்லாத வேலைக்கு மேலும் மேலும் ஆட்கள் நியமிக்கப்படுகிறார்கள்; தேவையற்ற புதிய புதிய பதவிகளும் வேண்டியவர்களை உட்கார்த்தி வைக்க உருவாக்கப்படுகின்றன. வேலையில்லாத் திண்டாட்டம் பெருகியுள்ள நிலையில் இதற்கு அவசியம் இருப்பதாக வாதிப்பது தவறு. வேலையில்லாத் திண்டாட்டம் ஒழியப் புதிய தொழிலகங்கள்தாம் உதவுமே தவிர, புதிய பதவிகள் அல்ல.

அமெரிக்காவில் ஒரு புதிய டெலிஃபோன் இணைப்புத் தர ஒருவர்தான் வாகனத்தில் வருவார்; அந்த வாகனத்தையும் அவரே ஓட்டி வருவார்! இங்கே, அந்த வேலைக்கு எட்டுப் பேர் வருகிறார்கள்! இந்த நிலை மாற வேண்டும். அல்லாத போனால் மாநில அரசும் மத்திய அரசும் போட்டி போட்டுக் கொண்டு உற்பத்திக்கு உதவாத இனங்களில் செலவைப் பெருக்க, பணவீக்கமும் விலைவாசி உயர்வும்தான் மக்களை வாட்டும். வருவாயெல்லாம் சம்பளம் தரவே சரியாகிப் போய் விட, மெய்யான அபிவிருத்திப் பணிகளுக்குப் பணம் போதிய அளவில் இராது. வறுமை ஒழியாது.

எனவே, 'மத்திய அரசுக்கு இணையான சம்பளத்தை மாநில அரசு ஊழியருக்கும் நாங்கள் பதவிக்கு வந்தால் கொடுப்போம்' என்று அறிவித்த கருணாநிதி, கூடவே, 'ஒவ்வொரு அரசு ஊழியரின் வேலைத் திறனும் கணிப்புக்கு உள்ளாகும்; சுறுசுறுப்பு காட்டாதவர்கள் கண்டிக்கப்படுவார்கள்' என்றும் 'அடுத்த ஐந்து ஆண்டுகளுக்குப் புதிதாக அரசு ஊழியர்களை நியமிக்க மாட்டோம்; புதிய பதவிகளை உருவாக்கவும் மாட்டோம்' என்றும் பேசியிருந்தால் அவரைப் பாராட்டலாம். அவர் இவற்றைக் கூறாததற்குக் காரணம், அவருக்குத் தெரியாது என்பதல்ல, தேர்தல் நெருங்குகிறது என்பதுதான்!

தமிழ்த்திரு நாடுதன்னைப் பெற்ற
தாயென்று கும்பிடடி பாப்பா. — பாரதியார்.



# பிரீதாவுக்கு ஒரு சொல்!

**ப**ரத நாட்டியம் கற்றுக் கொள்வதே ரொம்பவும் செலவுக்கு வழி வைக்கிற விஷயம். அதற்கும் மேல் அரங்கேற்றம், அதற்கான அணிமணிகள் என்றெல்லாம் வேறு செலவு! எனவே, வசதி படைத்த குடும்பத்துப் பெண்கள்தாம் இன்று பரதக் கலையை நன்றாகப் பயிலவும் பாதுகாக்கவும் வளர்க்கவும் முடியும். ஆனால் இவர்களில் பலர் ஒரு 'ஹாபி' மாதிரிதான் கற்றுக் கொள்வார்களே தவிர, உண்மையான ஆர்வம் இராது. ஆர்வம் இருந்தால் ஞானம் வராது. இரண்டும் இருந்தால் உடல்வாகு இருக்காது!

இந்த மூன்றும் சரியாக அமைந்த ஒரு அரங்கேற்றத்தை அண்மையில் காண முடிந்த போது மனத்துக்கு மகிழ்ச்சியாக இருந்தது. அது, அமரர் எஸ். எஸ். வாசன் அவர்களின் பேத்தியும் இன்றைய விகடன் ஆசிரியர் எஸ். பாலசுப்பிரமணியன் அவர்களின் குமாரியுமான செல்வி பிரீதாவின் அரங்கேற்றம். ஆர்வம், ஞானம், களையான முகம், அழகிய உடல்வாகு எல்லாம் அமையப் பெற்ற குமாரி பிரீதா, அரங்கத்தை ஆக்கிரமிப்பதுடன் பார்வையாளர்களின் இதயத்தையும் ஆக்கிரமிக்கும் திறமையைப் பெற்றிருக்கிறார். ஒரு நிமிஷம் கூட ரசிகர்களின் கவனம் சிதற அனுமதிக்காமல் தமது ஆற்றலை முழுமையாக வெளிப்படுத்தி ஈடுபாட்டுடன் ஆடினார்.

குறிப்பாக வர்ணத்தில் நாயகி பாவத்தையும் புரந்தர தாஸர் பாடல் ஒன்றில் கண்ணனை அலங்கரிக்கும் அபிநயங்களில் தாய்மை உணர்வையும் வெளிப்படுத்திய போது 'அடடா! முற்றிலும் மாறுபட்ட உணர்ச்சிகளை எத்தனை அழகாகச் சித்திரிக்கிறார்?' என்று மனம் குதூகலித்தது.

பிரீதாவின் குரு சித்ரா விசுவேசுவரன். வேறு யாருக்கும் கிடைக்க முடியாத ஓர் அரிய சொத்தைப் பெற்றிருக்கிறார். அது தான் திருவாளர் விசுவேசுவரன்! அன்று அவர் பதங்கள் பாடியது வெகு நேர்த்தியாக இருந்தது. அவரும் மதுரமான மதுரை சேதுராமனும் மாறி மாறிப் பாடினார்கள். எந்த ஒரு நடன நிகழ்ச்சியிலும் காதில் விழுவது சரியில்லை என்றால் கண் கொண்டும் பார்க்க முடியாது! அந்த விதத்தில் பிரீதா அதிர்ஷ்டசாலி.

அன்றைய நிகழ்ச்சி நிரலைத் தயாரித்திருந்த விதத்திலேயே சித்ரா தமது சிறப்பை வெளிப்படுத்தியிருந்தார். அதிகமாகக் கேட்டிராத பாடல்களுக்கு அபிநயங்கள்: புதிதாகக் கல்யாணி வர்ணம், சந்திர கௌன்ஸ் தில்லானா என்று முற்றிலும் வித்தியாசமான ஒரு நிகழ்ச்சியைப் பார்த்த திருப்தி ஏற்பட்டது.

பாலசரஸ்வதி, ருக்மிணி தேவி, பந்தநல்லூர் ஜெயலக்ஷ்மி காலத்திலிருந்து பரத நாட்டிய நிகழ்ச்சிகளைப் பார்த்து வருகிறவர்களுக்குப் பொதுவாகவே இன்றைய நடனக்கலை, கட்டித் தயிர் நிலையிலிருந்து நீர் மோராகி விட்டது போல் தோன்றும். 'அந்நாளைய அதிவேகப் பாத வேலைகள் எங்கே? விறுவிறுப்பான அடவுகளின் விறைப்பான தீர்மானங்கள் எங்கே? வர்ணங்களிலும் பதங்களுக்கான அபிநயங்களிலும் சஞ்சார பாவங்கள் எங்கே? எங்கே?' என்று தேடுவார்கள்.

எனவே பிரீதாவுக்கு ஒரு சொல்:

அரங்கேற்றத்துடன் 'முற்றும்' போடுவதானால் சரி: 'தொடரும்' என்றால், நீங்கள் பயின்றுள்ள கலையை அதன் பழைய மகோன்னத நிலைக்கு உயர்த்தப் பாடுபடுங்கள். உங்களால் முடியும்!

— குட்டி கிருஷ்ணன்

**ஆசிரியர்: ஏதாவது சந்தேகம் இருந்தால் கேளுங்க...**

**மாணவன்: நாளைக்கு நீங்கள் ஸ்கூலுக்கு வருவீங்களா, இல்ல போராட்டத்துக்குப் போவீங்களா சார்?**

**— கனகராஜ்.**



# சாவி

21-8-88 சுதந்திர தினச் சிறப்பிதழில்...



## ஸ்ரீவேணுகோபாலன்
## எழுதும்

# கள்ளழகர் காதலி

## சரித்திரத் தொடர்
## ஆரம்பம்




ராம்பிரபு

நான் ஏன் இப்படி ஆகி விட்டேன்? இருபத்தாறு வயது இளைஞனுக்குத் தேவையில்லாத எரிச்சல் எல்லாவற்றின் மீதும். உடம்பு சரியில்லாமல் அழும் என் குழந்தையின் குரல் கூட எனக்குப் பரிதாபமாகத் தோன்றாமல், நாராசமாய்க் கேட்கிறது. வாசலில் போய்ச் சும்மாவேனும் நிற்கும் என் வயது வந்த தங்கையைப் பார்த்து, "உள்ளே வாடி.... சனியனே.. அங்கே என்ன வேடிக்கை?'' என்று கத்தத் தோன்றுகிறது.

அவசரப்பட்டு விட்டேனோ? எங்கேயோ போக நினைத்து, எப்படியோ வாழ எண்ணி இலக்கு மாறி விட்டேனோ? அப்பா போனதுமே கிடைத்த அரசாங்க வேலையில் சிக்கி, காகிதக் குப்பைகளில் மாட்டிக் கொண்டு விட்டேன். இனி வாழும் காலம் வரை போராட்டம்தான்.

என்னைச் சுற்றி எல்லோருமே மகிழ்ச்சியாய் இருக்கிறார்கள். நான்தான் மீள முடியாத சேற்றில் சிக்கிக் கொண்டு....

"குற்றம் ஏதும் நான் செய்யவில்லை — எனைக்
குடும்பச் சிறையிலே பூட்டி விட்டார் — அன்று
மூட்டிய தீயினில் மாட்டிக் கொண்ட
என் ஆசைகள் போயின சாம்பலென...

சே! தேவையில்லாமல் இது ஏன் இப்போது நினைவுக்கு வருகிறது.

"பேரனோ, பேத்தியோ கண்ணாரப் பார்க்கணும்னு ஆசையா இருக்குப்பா.. நான் எப்ப திடும்னு உங்க அப்பாகிட்டே போயிடுவேனோ...! ஒரு கல்யாணம் பண்ணிக்கப்பா...''

அம்மா சொன்னாளே என்றுதானே திருமணம் செய்து கொண்டேன். அதுதான் தப்பாகி விட்டது. மூணு வருஷமாகியும் அம்மாவுக்கு ஒன்றும் ஆகவில்லை. எனக்குத்தான் உயிர் போகிறது. பிரச்னை... பிரச்னை.... ஏதாவது ஒன்று மாற்றி ஒன்றாகத் தொடர்ந்து கொண்டேயிருக்கிறது.

அலுவலகத்திலிருந்து கிளம்பும் போது நண்பன் கண்ணடித்தான். "சினிமாவுக்குப் போறோம்... நீயும் வரியா?''

"நீ அதிர்ஷ்டசாலிப்பா... அனுபவிக்கறே... குழந்தைக்கு உடம்பு சரியில்லே... நேத்தே நான் போக முடியலே... இன்னைக்காவது வரச் சொன்னாள் என் மனைவி...''

சொல்லிவிட்டு வந்த பின்பும் மனம் தவித்தது. என் வயது இளைஞர்கள் 'ஜாலி'

# ஆகவே செக்ஷன் 302 படி...



## வாசகர் கருத்து

• பட்டுக்கோட்டை பிரபாகர் எழுதிய "ஆகவே செக்ஷன் 302 படி" என்ற தொடர்கதையை முதல் அத்தியாயம் முதல் இருபத்தாறாவது அத்தியாயம் வரை விடாமல் படித்தேன். எப்போது வியாழக் கிழமை வரும் என்று ஏங்கி, ஆவலுடனும், படித்த சஸ்பென்ஸான கதை. ஜெயராஜின் படங்களையும் மிகவும் ரசித்தேன். தொடர் இவ்வளவு சீக்கிரம் முடிந்ததென்று வருத்தமாகவே உள்ளது. எழுதிய பட்டுக்கோட்டை பிரபாகருக்கும் வெளியிட்ட கல்கி பத்திரிகைக்கும் எனது மனமார்ந்த பாராட்டுக்கள்.

சென்னை — 50, டி. குணசேகர்.

• சத்தியம், தர்மம் நிச்சயமாக வெல்லும் என்பதைப் பட்டுக்கோட்டை பிரபாகர் நிலைநாட்டி விட்டார். கதையின் தொடர்ச்சியில் சில சினிமா 'ஒட்டல்கள்' இருந்தாலும் வாராவாரம் ஆவலாக எதிர்பார்க்கும் படி எழுதிவிட்டார்.

சென்னை — 77, எஸ். ஏ. பழனிவேல்.

• நவீனமான கருவுடன், 26 வாரங்களும் நெஞ்சை 'திக், திக்' என அடித்துக் கொள்ள வைத்த கதை! நிவிதா பாத்திரத்தின் மூலம் கடமை, கண்ணியத் தில் நம்பிக்கை வைக்க வேண்டும், பெண்கள் — என்பதைத் தெளிவுபடுத்தியது! ஆனால், கூட இருந்தே 'யோசனைகள் வழங்கிக் கொண்டிருந்த தீபக், திடீரென்று மனம் மாறியது சினிமாட்டிக்காக இருந்தது.

குத்தாலம், வி. சுந்தரராமன்.

• பட்டுக்கோட்டை பிரபாகரின் இக்கதை மிகவும் வித்தியாசமாக இருந்தது. பதுங்கிப் பாயும் புலியைப் போன்ற ஷியாமின் வில்லத்தனமான பாத்திரமே அதற்குக் காரணம். மேலும், கடைசி அத்தியாயத் தில் வித்யாசாகர் சென்ற பைக்கின் வேகத்தைவிடக் கதையைப் படித்தவர்களை வேகமாகப் படிக்கும் படி செய்தது, ஆசிரியரின் கதை சொல்லும் திறனுக்குச் சான்று. கதாபாத்திரங்களைத் தத்ரூபமாக வரைந்த ஜெயராஜுக்கும் நன்றி.

திருவெறும்பூர், என். ரவி.

• முதல் இருபத்து நாலு வாரங்கள் 'அன்ன நடை போட்ட,' ப. கோ. பிரபாகரின் 'ஆகவே செக்ஷன் 302 படி', கடைசி இரண்டு வாரங்களில் 'பஞ்ச கல்யாணியாய்ப் பறந்தது.' எப்படியோ புதுமணக் காதல் தம்பதிகள் ஆபத்திலிருந்து தப்பியதில் சந்தோஷம்.

செங்குன்றம், அ. ஜமால் மொய்தீன்.

• "ஆகவே செக்ஷன் 302 படி" தொடரில் ஷியாமின் முடிவு, ஊகிக்கக் கூடியதாக இருந்தாலும், வித்யாசாகர் கொலையாளியாக இருப்பார் என்பது எதிர்பாராதது.

ராணிப்பேட்டை, பேப்பர் கார்த்திக்.

யாகத்தான் இருக்கிறார்கள்.

"சார்! அடுத்து நீங்க போகலாம்."

தோளில் உறங்கும் குழந்தையை அணைத்த படி என் மனைவி டாக்டரின் அறைக்கு உள்ளே போக, நான் தொடர்ந்தேன். பக்கத்து அறையிலிருந்து வெளிப்பட்டாள், லேடி டாக்டர் — லலிதா.

"இப்ப எப்படியம்மா இருக்கு? நேத்து பையன் நல்லாத் தூங்கினானா?" என்ற வாறே அவள் என்னைப் பார்க்க, எங்கள் இருவருக்குமே அதிர்ச்சிதான்.

"ரமேஷ்... நீங்களா? இவங்க உங்க மனைவிதானா? எப்படி இருக்கீங்க?" அவளால் மகிழ்ச்சியை அடக்க முடியாமல் கேட்டாள்.

பழைய நினைவுகளிலிருந்து விடுபட்டு, "இருக்கேன்... ம்... குழந்தைக்கு என்ன?" என்றேன்.

"லேசா சுரம்தான்... பல் முளைக்கிற தாலே கொஞ்சம் பிராப்ளம்... எல்லாம் சரியாயிடும்...."

அவள் பதவிசாய் ஊசி போட்டாலும் குழந்தை வீறிட்டது.

"நீங்க இங்கேதான் இருக்கீங்களா? இப்ப டயம் இல்லே... நிறையப் பேசணும்... உங்க விலாசம் கொடுங்களேன்... நானே வரேன்..."

என் மனைவியைப் பார்த்தேன். அவளிடம் எந்த மாறுதலும் இல்லை. விலாசத்தைச் சொல்லிவிட்டு வந்தோம்.

வீட்டிற்கு வந்ததும் மனைவி கேட்டாள்.

"இந்த டாக்டர் லலிதாவை உங்களுக்கு முன்னமே தெரியுமா?"

"தெரியுமாவா? பட்டணத்துலே காலேஜ் வரைக்கும் ஒண்ணா படிச்சவ... அவ கொடுத்து வச்சவ... படிச்சு டாக்டரா யிட்டா... நல்ல பொஸிஷன். வாழ்க்கை... நான்தான் கை கட்டி, பேச்சு கேக்கற வேலைக்காரனாயிட்டேன்... அவளைப் பார்த்ததும் அவமானத்தால் கூனிப் போய்ட்டேன்..."

"ஏன் சலிச்சுக்கறீங்க? உங்களுக்கு என்ன குறை?"

"ஆறுதல் சொல்றியா? நான் மட்டும் எதிர்பார்த்த மேல்படிப்புக்குப் போயிருந்தா...."

"அதுக்கென்ன செய்ய முடியும்... நமக்குக் கிடைச்சதை நெனைச்சுத் திருப்திப் பட்டுக்கணும்..."

ஓர் அவசர கதியில் பழைய நினைவுகள் என்னுள் ஊர்வலம் வந்தன. கல்லூரியில் முதல் வருடம். அவள் என் மனத்தில் ஒரு சலனத்தை ஏற்படுத்தினாள். ஒருநாள் என்னை, என் மனத்தை அவளிடம் சொன்னேன்.

"அவசரப்படாதே... ரமேஷ்... இப்பதான் எதிர்கால வாழ்வைப் பற்றிச் சிந்திச்சு நாம செயல்படணும்... நாம நிலைச்சு நிற்கப் படிப்புத்தான் இப்ப முக்கியம்... வேறே எண்ணமெல்லாம் வேண்டாம்...

என்னைப் பார்... இன்னும் டாக்டருக்குப் படிக்கணும்னு ஒரு வெறியோட இருக்கேன்.. எப்படியும் இந்த வருஷம் ஸீட் கெடைச்சுடும்... ராபர்ட் ஃப்ராஸ்ட் மாதிரி நான் போக வேண்டிய தூரம் நிறைய இருக்கு...''

நாகரிகமாய் மறுத்தாள்.

அவள் எண்ணப்படியே இதோ டாக்டராய், பங்களாத் தெருவில் புதிய வீட்டின் சொந்தக்காரியாய் ஆகி விட்டாள்.

என்னை வெறுப்பேற்றுவதற்காகவே இது போன்ற சந்திப்புகள் நிகழ்கின்றனவா?

அடுத்த மாதத்தில் ஒருநாள் எங்கள் காலனியில் குடியிருப்பவரின் மகள் திருமணம் நெய்வேலியில் நடந்தது. கல்யாண வீட்டார் என் மனைவி, குழந்தை, அம்மாவையும் அவர்கள் வேனில் அழைத்துப் போனார்கள். ஆபீஸ் வேலையால் நான் போகவில்லை.

''நான் வர பதினோரு மணி கூட ஆகலாம்... நீ தாழ்ப்பாள் போட்டுக்கிட்டுத் தூங்கு...''

— பரீட்சைக்குப் படிக்கும் தங்கையிடம் சொல்லி விட்டு ஆபீஸ் வந்தேன். இரவு எட்டு மணி வரை அவசரமான பைல்களைப் புரட்டிக் கொண்டிருந்த போது செய்தி வந்தது. 'இன்ஸ்பெக்ஷன் இரண்டு வாரம் தள்ளி வைக்கப்பட்டுள்ளது.'

அதற்கு மேல் மனம் ஒப்பாமல் வீட்டுக்குப் புறப்பட்டேன். ஏனோ லலிதாவின் நினைவு வர, அவளைப்பார்க்கப்போனேன். யோசனையில் மூழ்கியிருந்தவள் என்னைப் பார்த்ததும் மலரச் சிரித்தாள். கூட்டம் இல்லாததால் நாங்கள் பேச முடிந்தது.

''போன வாரம் நான் வீட்டுக்கு வந்திருந்த போது நீங்க இல்லே... வெளியூர் காம்ப் போயிருக்கறதா உங்க மனைவி சொன்னாங்க... உங்ககிட்டே அவங்க ஏதும் சொல்லலையா?'' என்றாள் லலிதா.

நிச்சயமாய் என் மனைவி ஏதும் சொல்லவில்லை. இவள் வரவு அவளுக்குப் பிடித்திருக்காது.

''ம்... சொன்னா... அதான் பார்த்துட்டுப் போகலாம்னு வந்தேன்...''

''நிம்மதியான வாழ்க்கை இல்லே... உங்களுக்கு...''

சலிப்பாய்ச் சிரித்தேன். அவள் மேசை மேலிருந்த கண்ணாடி பேப்பர் வெயிட்டைச் சுற்றி விட்டேன்.

''நீங்க ஆசைப்பட்ட படியே நாம இணைஞ்சிருந்தாலும் கூட இப்படியொரு வாழ்க்கை அமைஞ்சிருக்குமோ? நல்ல மனைவி... அழகான குழந்தை... எப்படி இருக்கான் குழந்தை ரவீந்தர்... ரொம்ப சுட்டி அவன்....''

என்னை ஆழ்ந்து கவனித்தாள்.

''ஏன் டல்லா இருக்கீங்க? பழைய ரமேஷ் இல்லே... நீங்க... ஏனி ப்ராப்ளம்?''

எதைச் சொல்வது?

''வாழ்க்கையே பிரச்னைதான்...''



''டி.வி.யில் இரண்டாவது சானலை ஆரம்பிச்சதில் என் பாடு படு தொல்லையாகப் போச்சு....''

''ஏன்... என்னாச்சு...?''

''என் முதல் சம்சாரம் முதல் சானலையும், இரண்டாவது சம்சாரம் இரண்டாவது சானலையும் வைக்கச் சொல்றாளுக... யார் பேச்சைக் கேட்டுத் தொலைக்கறதுன்னு தெரியல....!''

''வேடிக்கையாய் இருக்கு நீங்க சொல்றது.... ஞானியாட்டம் பேசறீங்க...''

''இண்டல் வேணாம்... நான் சம்பாதிக்கறது போதலே... அம்மாவும் சிக்காளியாயிட்டா... தங்கையோ கல்யாணத்துக்குத் தயாரா நிக்கறா... இப்ப இருக்கிறதோ வாடகை வீடு... வீட்டுக்காரன் வாடகையைக் கூட்டிட்டான்... தர இஷ்டமில்லேன்னா காலி பண்ணச் சொல்றான். திடீர்னு நான் எங்க போறது?''

என்னைப் பார்க்கப் பாவமாயிருந்ததா, அல்லது என் பேச்சு பிடிக்கவில்லையோ?

''ஏதாவது சாப்பிடறீங்களா?'' என்றவள் பஸ்ஸரை அழுத்தினாள். உள்ளே வந்த பையனிடம் இரண்டு காப்பி வாங்கி வரச் சொன்னாள்.

''உங்க மனநிலையைப் பற்றி உங்க மனைவி நான் வந்தப்ப சொன்னாங்க... என்னைச் சந்திச்சதுக்கே ரொம்ப ஃபீல் பண்ணிங்களாம்... பிரச்னையைச் சந்திக்கணும்.. அதுதான் வாழ்க்கை... அதுக்காக எதையோ இழந்து விட்ட மாதிரி மனம் சோர்ந்துட்டா எப்படி?''

''அட்வைஸ் பண்றது சுலபம்தான்... என் நிலைமை புரியாது... ஒவ்வொரு நாளும் ஏண்டா விடியறதுன்னு இருக்கு....''

''ஸில்லி... நாளைக்குச் சாப்பிட இல்லேங்கற ஏழைகூட மகிழ்ச்சியாத்தான் இருக்கான்... இப்ப உங்க பிரச்னை வீடுதானே? எங்க வீட்டுக்கே வந்துடுங்க... பெரிய வீடு... நானும் அப்பாவுந்தான்.. ஒரு போர்ஷன்லே தங்கிக்கலாம்...''

சந்தோஷப்பட்டேன்.

''செய்யலாம்.. ஆனா... வாடகை...''

''ஒண்ணும் தரவேண்டாம்.. அப்படியே தங்கிக்கலாம்... உங்களுக்குக் கஷ்டமாயிருந்தா மாசம் பத்து ரூபாய் கொடுங்க.. போதும்...''

''என் மனைவியைக் கேட்டுட்டுச் சொல்றேன்..''

அப்போது வாசலில் ஹார்ன் சப்தம் கேட்டது.

''நான் கிளம்பணும்.. கார் வந்தாச்சு.. வாங்க... உங்க வீட்டிலே விட்டுட்டுப் போறேன்...''

ஐந்து நிமிடப் பிரயாணம் என்றாலும் 'மாருதி'யில் போனது திருப்தியாய் இருந்தது.

**ம**னைவி வந்ததும் கேட்டேன்.

''டாக்டர் வீட்டுக்குக் குடி போகலாமா?''

''வேணாங்க....'' ஒற்றையாய்ச் சொல்லி முகம் திருப்பிக் கொண்டாள்.

''வேறே எங்கே இப்போ வீட்டுக்கு அலையறது? நாம மறுத்தா அவங்க நல்ல மனசைப் பாதிக்கறதா ஆயிடும்....''

''பாவம்! அவங்க தனியா இருக்காங்க.. நாம வேற அங்கே போய்....''

''நீ என்ன சொல்ற....?''

''எல்லாம் காரணமாத்தான் சொல்றேன்.. தனக்கிருக்கற துக்கத்தை மறந்து வாழ்விலே போராடற அவங்க வீட்டிலே போய் நாம சுகமா இருக்கணுமா?''

''துக்கமா......?''

''இங்க வந்தபோது சொன்னாங்க... படிப்பு முடிஞ்சதுமே திருமணமாகி, பட்டணத்திலே குடும்பம் வெச்சிருந்தாங்களாம்... அவங்க கணவர் ஏர்லைன்ஸ்லே ஆபிசராம்... ஒரு விபத்துலே அவரும், குழந்தையும் இறந்துட்ட துக்கத்திலே ஊரை விட்டே வந்தாங்களாம்.

''இந்த விவரமெல்லாம் எனக்குத் தெரியாது....''

''நம்ம பையன் கூட அவங்க குழந்தை போலவே இருக்கான்னு சொல்லிக் கொஞ்சினாங்க... அப்பவே அவங்களாலே அழுகையைக் கட்டுப்படுத்திக்க முடியலே...''

**இ**ரண்டு நாட்களுக்குப் பிறகு போனில் லலிதா அழைத்தாள்.

''என்ன ரமேஷ்? வீட்டுக்கு எப்ப குடித்தனம் வரீங்க? நீங்க வர்றதா சொன்னதும் அப்பாவும் சந்தோஷப்பட்டாங்க... உங்க மனைவியைக் கேட்டாச்சா?''

''அதுக்கு இப்ப அவசியம் இல்லேன்னு நினைக்கிறேன்... ரொம்ப நாளா குடியிருக்கற வீட்டை விட்டு வர அம்மாவும் பிரியப்படலே... வீட்டுக்காரன்கிட்டே மறுபடியும் பேசலாம்னு இருக்கேன்... தப்பா நெனைக்க வேணாம்...''

''பரவாயில்லே...'' — அவள் குரலில் ஏமாற்றம் தொனித்தது.

''அப்புறம்....''

''சொல்லுங்க.... ரமேஷ்...''

''உங்களைப் பற்றி என் மனைவியிடம் நிறைய சொல்லியிருக்கீங்க... என்னிடம் எதும் சொல்லலையே!''

மெல்லச் சிரித்தாள்.

''அதுவா?'' நீங்க என்னை எதுவும் கேட்கலே... அதனால சொல்லலே....''

சாட்டையால் அடித்தது போல் சிலிர்த்தேன். என்னைப் பற்றி அவளிடம் உளறிக் கொட்டினேனே தவிர, அவளை 'நீ எப்படி இருக்கிறாய்?' என்று கேட்கத் தோன்றவில்லையே! என்ன மனிதன் நான்!

''மன்னிக்கணும்... நீங்களாவது சொல்லியிருக்கலாம்....

''ஏன் சொல்லணும்? சந்தோஷத்தை வேணா பகிர்ந்துக்கலாம்.. துக்கத்தை எதுக்கு... அதை மற்றவர்கிட்டே சொல்றதிலே எந்தப் பிரயோசனமும் இல்லேன்றது என் எண்ணம்....''

மறுபடியும் ''சுரீர்''.

''அசந்து போய்டாதீங்க... குடித்தனம் வராட்டி போறது.. எல்லாரையும் அழைச்சுக்கிட்டு ஒருநாள் வாங்க... காப்பி, டிபன் சாப்பிட.... டிரய் டு பீ சியர் ஃபுல்....''

வீட்டிற்கு வந்ததும் எதற்கோ அடம் பிடித்து அழுது கொண்டிருந்த மகனை எடுத்துச் சமாதானப்படுத்தினேன். அவன் சிரித்தான். ஏனோ என் கண்கள் பனித்தன.

— இச் சிறுகதைக்காக நடித்தவரை வண்ணப்படம் எடுத்தவர்: யோகா



**இவரிடம்...**

''மொரார்ஜி தேசாய் பிரதமராக இருந்த போது என்னை அலுவல் காரணமாக வெளிநாடுகளுக்கு அனுப்பினார். புறப்படும் சமயம் என்னிடம் இருநூறு டாலர் தந்து ''உங்கள் செலவுக்கு வைத்துக் கொள்ளுங்கள்'' என்றார். நானும் மறுக்காமல் பெற்றுக் கொண்டு புறப்பட்டேன். ஒரு வார காலம் வெளிநாடுகளில் சுற்றுப் பயணம் செய்தேன். அரசு விருந்தினராகச் சென்றதால் செலவு இல்லை. திரும்பி வந்த நான் பிரதமரிடம் 196 டாலரை கொடுத்தேன். அவர் என்னை ஆச்சரியப்பட்டுப் பார்க்கவில்லை. ''நாலு டாலருக்கு என்ன செலவு?'' என்றுதான் கணக்குக் கேட்டார். மக்கள் வரிப் பணமல்லவா? ''படிப்பதற்குப் புத்தகம் ஒன்று வாங்கினேன். தங்களுக்கும் பயன்படும்'' என்று கூறிப் புத்தகத்தைத் தந்தேன். பிறகே லேசான புன்னகை புரிந்து இதர விஷயங்கள் பற்றிப் பேசினார்!''

பொதுக் கூட்டத்தில் செழியன் பேசியது.

அனுப்பியவர்: ஐ. முருகன்.

**இவர் கேட்ட கணக்கு...**



இலவச இணைப்புக்கள்

அமரர் **கல்கி** எழுதிய
அற்புதமான ஆறு குறுநாவல்கள்.

1. ஒற்றை ரோஜா
2. அமர வாழ்வு
3. பொங்குமாங்கடல்
4. காதறாக் கள்ளன்
5. மாடத்தேவன் சுனை
6. ஜமீன்தார் மகன்

ஆகஸ்டு 7' ஆண்டு மலரிலிருந்து
**கல்கி** வழங்குகிறது.





# பலமும் பலவீனமும்

**கா**லை மணி ஒன்பது.

பல்லாவரத்தை நெருங்கிக் கொண்டிருந்த பல்லவனின் 18 J பறந்து கொண்டிருந்தது.

சில நிமிடங்களில் பேருந்து, பல்லாவரம் பஸ் ஸ்டாப்பிலிருந்து பல மீட்டர் தள்ளியே நின்றது.

வேகமாகச் செல்லும்வாகனங்களின் பின்னால் பறக்கும் காகிதங்களைப் போல, மக்கள் கூட்டம் பஸ்ஸின் பின்னாலேயே ஓடிவந்தது.

மூன்று பேர் மிகவும் கஷ்டப்பட்டுத் தங்களை பஸ்ஸிலிருந்து உதிர்த்துக் கொண்டனர். ஆறு பேர் முண்டியடித்துக் கொண்டு ஏறினர்.

கடைசியாகஏறிய,மன்னிக்கவும்,தவழ்ந்து தொத்திக் கொண்ட அந்த ஆளுக்காக பஸ் ஒரு நிமிடத்திற்கு மேலாக நிற்க வேண்டி வந்தது. இரண்டு கைக்கட்டைகளையும் அவன் கையில் எடுத்துக் கொண்டு வண்டிக்குள் ஏறி, மீண்டும் கட்டைகளைப் பிடித்துக் கொண்டு நிற்பதற்குள் வண்டி புறப்பட்டு விட்டது.

கைக்கட்டைகளை மெதுவாக ஒரு பக்கத்தில் இடுக்கிக் கொண்டு, மற்றொரு கையினால் பக்கத்திலுள்ள ஒரு கம்பியைப் பிடித்துக் கொண்டு நிற்கச் சிரமப்பட்டுக் கொண்டிருந்த அந்த ஆளுக்காகச் சிலர் பரிதாபப்பட்டனர்.

உட்கார்ந்திருந்த பலர், முகத்தை வேறு பக்கம் திருப்பிக் கொண்டனர் — பார்த்தால் இடம் கொடுக்க வேண்டும் என்ற எண்ணத்தில்.

நடுத்தர வயதினரான அந்த ஆள், எங்கோ வேலைக்குச் செல்பவர் போலும். ஒரு பையில் சிறிய டிபன் கேரியர் வைத்திருந்தார். நிற்க முடியாமல் நின்று கொண்டு மகளிர் பக்கத்தில் உள்ள முதல் இரண்டு ஆசனங்களை ஏக்கத்துடன் பார்த்துக் கொண்டு இருந்தார்.

மேலே, ''வயது முதிர்ந்தோருக்கும், ஊனமுற்றோருக்கும்'' என்ற வாசகம் அழகாக எழுதப்பட்டிருந்தது.

அதில் இரண்டு நடுத்தர வயதுப் பெண்மணிகள் உட்கார்ந்திருந்தனர் — தலை நிறைய மல்லிகைப்பூ. வாய் நிறைய வெற்றிலை.

நின்றிருந்த பயணிகளில் வயதான ஒருவர், ''ஏம்மா, அவருக்கு இடம் கொடுக்கக் கூடாதா?'' என்று கேட்டு விட்டார்.

அவ்வளவுதான். ஆரம்பமானது குருக்ஷேத்திரம்.

''இந்த ஆம்பிளைங்களுக்குப் பெண்கள் உட்கார்ந்திருந்தாலே பொறுக்காது. இவங்க மாதிரி பொம்பளைங்க பலசாலிகளா என்ன, நின்னுக்கிட்டே வர. பொம்பளைங்களுக்குன்னு தனியா சீட்டு ஒதுக்கி இருக்காங்களேன்னு எரிச்சல் இந்த ஆம்பிளைங்களுக்கு...'' — மழை பெய்து ஓய்ந்தது போன்று, பேச்சைக் கொட்டி நிறுத்தினாள் வயதில் சிறியவளாகத் தெரிந்த பெண்.

''பெண்களுடைய சீட்டுகளில் ஆண்கள் உட்கார்ந்துஇருந்தால் மட்டும்எழுப்பிவிட்டு விடும் இவர்கள், மற்றவர்களுக்காக உள்ள சீட்டுகளில் உட்காரலாமோ? மேலே எழுதி இருப்பது தெரியலையோ?'' என்றார் மற்றொரு பயணி.

அந்தப் பெண், ''ஆமாம், எத்தனையோ தான் எழுதி இருக்கு. எல்லாரும் அதன்படி தான் நடக்கிறாங்களாக்கும்?'' என்றாள். கொஞ்ச நேரம் காரசாரமான விவாதம் நடந்தது.

ஆனால் அந்த ஊனமுற்ற நபருக்கு உட்கார இடம் கிடைக்கவில்லை!

பிரயாணச் சிநேகமும், சண்டையும் என்கிற மாதிரி பஸ் முன்னேற, முன்னேறச் சண்டையும் தேய்ந்து மறைந்தது.

**நா**ன். எல். ஐ. ஸி. ஸ்டாப்பில் இறங்கினேன்.

பஸ்ஸில் வாக்குவாதம் செய்த இரு பெண்களும் கூட அங்குதான் இறங்கினார்கள். இறங்கியதும் அவர்கள் பேசிக் கொண்டது என் காதில் விழுந்தது:

''மாலதி, இப்போ காப்பி வேண்டாம், ஒண்ணும் வேண்டாம். இப்பவே க்யூவில் போய் நின்னால்தான் பன்னிரண்டு மணி ஷோவுக்கு டிக்கெட் கிடைக்கும்.''

''சரி, நேரே தியேட்டருக்கே போவோம்...''

என் கைக்கடிகாரத்தில் மணியைப் பார்த்தேன்.... ஒன்பது! பன்னிரண்டு மணி ஷோவுக்கு ஒன்பது மணி முதலே க்யூவில் நிற்கத் தயாராயிருந்தது தாய்க்குலம்!

அந்தப் பெண்கள் பஸ்ஸில் பேசியது எனக்குச் சட்டென்று நினைவு வந்தது: ''பொம்பளைங்க பலசாலிகளா என்ன நின்னுக்கிட்டே வர...?''

அவர்களின் பலமும் பலவீனமும் என்னவென்று புரிந்தது.

**மது கஸ்தூரி**

## க்ரேட் ஷேக் பற்றி. சில உண்மைகள் உங்களை வியப்பில் ஆழ்த்திடும்.

### க்ரேட் ஷேக். முழுமையான புரதச்சத்து ஆகார பானம்.

உலகிலேயே மிகச் செறிவான இயற்கைப் புரதச்சத்தின் மூலாதாரமான ஸோயாவிலிருந்து தயாராவது க்ரேட் ஷேக். ஏதோவொரு புரதம் நிறைந்தது அல்ல க்ரேட் ஷேக். இதில் உள்ளது, உங்கள் உடல் வளர்ச்சிக்கும், தசை வளர்ச்சிக்கும் மிகத் தேவையான உயர்தர புரதச்சத்து. இது, 22 அமினோ அமிலங்களில் 20 அமினோ அமிலங்களை, நல்ல விகிதத்தில் கொண்டது; இன்றியமையாத எல்லா 9 அமினோ அமிலங்களையும் கொண்டது.

### க்ரேட் ஷேக் விட்டமின் நிறைந்தது— மாத்திரையோ மற்றதோ இன்றியே.

B காம்ப்ளெக்ஸ் விட்டமின்கள் செறிந்தது க்ரேட் ஷேக்; அத்துடன், A மற்றும் E விட்டமின்களும். இரும்புச் சத்து, பாஸ்வரம் மற்றும் கால்சியம் ஆகிய கனிமச் சத்துக்களும் செறிந்தது.

### க்ரேட் ஷேக். ஆரோக்கியமான மாற்றுணவு

க்ரேட் ஷேக் கொழுப்புச் சத்து அற்றது. இம்மியும் கொலெஸ்டிரால் இல்லை. சிலர்க்கு அலெர்ஜியான, பண்ணைப்பாலிலுள்ள லாக்டோஸ் அற்றது இது.

### க்ரேட் ஷேக். சாப்பாடுகளுக்கிடை—யே ஒரு ஆகாரம்.

அடுத்த முறை பசிக்கும்போது, அதுவும் சாப்பாட்டு வேளை அல்லாத போது, குளுமையான க்ரேட் ஷேக் அருந்துங்கள்.

செறிவான, திருப்திதரும் இந்த ஸோயாமில்க் பானம் சுவைமிக்க பல மணங்களில் கிடைக்கிறது.




க்ரேட் ஷேக் ஸோயா நலமிக்க ஹாயான உணவு பானம்.
உலகிலேயே மிகச் செறிவான புரதச்சத்தின் மூலாதாரம்.

தயாரிப்பாளர் : நோபிள் ஸோயா ஹவுஸ் லிமிடெட்,
விநியோகஸ்தர்கள் : கோத்ரெஜ்

Enterprise/NS/269 Tm



# தெய்வத்தின் குரல்



1. ஜனங்களுக்கு நல்ல எண்ணங்கள் உண்டாக்குகிற சக்தியைப் பெற்றவை வேத மந்திரங்கள்.
2. நம் கண்ணுக்கும், காதுக்கும், புத்திக்கும் யுக்திக்கும், எட்டாததைச் சொல்லவே வேதம் இருக்கிறது.
3. "வேதம் நித்யம் அத்யதாம்" – அதாவது தினமும் வேதத்தை அத்யயணம்-பாராயணம் செய்ய வேண்டும்.
4. வேதம் ஏன் இருக்க வேண்டுமென்றால், முதலில் அந்த மந்த்ர சப்தம், அதிலுள்ள யக்ஞாதி கர்மாக்கள் லோகத்தில் இருந்து கொண்டிருந்தாலே ஸகலருக்கும் பெரிய க்ஷேமம். இதனால் மழை, தனதான்ய சுபிட்சம் உண்டாவதோடு ஜனங்களின் எண்ணமும் உத்தமமானதாக இருக்கும்.
5. ஒற்றுமை, சாந்தி தேசத்துள் ஏற்பட வேண்டுமென்றால் வேதத்திற்கென்றே ஒரு கூட்டம் இருந்துகொண்டே இருக்க வேண்டும்.
6. இன்றைக்கும் என்றைக்கும் நம் தேசத்திற்கும் மட்டுமன்றி உலகம் முழுவதும் சுபிட்சத்தையும், ஆத்ம சாந்தியையும் உண்டாக்குவதற்காக வேதரக்ஷணம் அதி முக்கியம்.

சாதாரண மூல பாராயணத்தைவிட ஜடாபாராயணம் கேட்பவர்களுக்கு ஆயிரம் மடங்கு பலனளிக்கும். கனபாராயணம் கேட்கும் பலன் அதைவிட பலபல மடங்கு. இம்மாதிரி வேதபாராயணம் செய்யும் இடங்களுக்கு சென்று கேட்டாலே பயன் பெறலாம்.

# ஜீவா



சிலுக்கு ஸ்மிதாவை இந்தப் படத்தில் உபயோகப்படுத்தி இருப்பது போல் வேறு எந்தப் படத்திலும் உபயோகப்படுத்தியிருப்பார்களா என்பது சந்தேகமே. சிலுக்கிடம் இன்னும் காந்தம் இருக்கிறது.

அமலாவை இந்தப் படத்தில் 'எக்ஸ் போஸ்' செய்திருக்கும் அளவு இதுவரை வேறு படத்தில் செய்தார்களா, சந்தேகமே.

பாடல் காட்சிகளில் லோகட், மினி ஒரு வேளை போதாதோ என்று சிங்கிள் பீஸ் நீச்சல் டிரஸ். கிளாமருக்கு என்று நிச்சயித்து விட்டதால், காரெக்டரில் பளப்பளா உண்டு. வெயிட் இல்லை.

சத்யராஜ் இந்தப் படத்தில் சண்டை போட்டு டிஷ்யூம் என்று வெடித்திருப்பது போல வேறு படத்தில் செய்திருப்பாரா என்பது சந்தேகமே.

பிரிய அம்மா தூக்கில் தொங்குவது பார்த்து வெடித்து அழும் அழுகையில் ஓர் ஆஸ்கார். காதல், ஊடல் காட்சிகளில் கிளு கிளுப்பைக் கூட்டிக் கொள்ளும்போது ஒரு பாரத். தடாலடி, அதிரடி, நெத்தியடி ஸ்டண்ட் வேலைகளில் ஒரு கலைமாமணி.

பிரதாப்போத்தன் இந்தப் படத்தில் ஒதுங்கி நின்று சுறுசுறுப்பை ஏற்றியது போல் வேறு படத்தில் செய்திருப்பாரா — சந்தேகமே.

படம் ஆரம்பிக்கும் காட்சியே திடுக், திடுக். பரபரப்பாகக் காட்சிகள் மாறும் போது வெடுக், வெடுக். அநியாய நீளத்திற்கு வில்லனை வசனம் பேச விடும்போது மட்டும் கடக், முடக்.

கங்கை அமரன் இசை–தென்றல்.

அஷோக்குமார் காமிரா — வசந்தம்.

மணம் குணம் காரத்திற்கு — ஜீவா மசாலா!

— ஜெயமன்மதன்.




## அத்தியாயம் 24
## நினைவு வந்தது

வானதி மீண்டும் ஒரு முறை நினைவற்ற நிலையை அடைந்தாள். அவளுடைய கண்களும் மூடிக் கொண்டன. கொஞ்சம் கொஞ்சமாகச் சுய நினைவு வரத் தொடங்கியது. நாகலோகத்திலோ தேவலோகத்திலோ தான் இளவரசரை மணந்தது வெறும் பிரமை என்பதை உணர்ந்தாள். இளவரசரைப் பற்றிய துயரமான செய்தி கேட்டதையும் அதன் பேரில் தான் ஓடைக் கரையில் வந்து நின்றதையும் தலை சுற்றி நீரில் விழுந்ததையும் நினைவுபடுத்திக் கொண்டாள். இந்த நினைவுகள் அவளுக்கு எல்லையற்ற ஏமாற்றத்தை அளித்தன; நெஞ்சில் சுருக்கென்று ஈட்டி பாய்வது போன்ற வலியையும் அளித்தன. கண்களைத் திறக்க முயன்றாள். ஆனால் முடியவில்லை. தன்னைத் தண்ணீரிலிருந்து தூக்கிக் கரை சேர்த்தது யாராயிருக்கும்? இளையபிராட்டியாகத்தான் இருக்க வேண்டும். சற்றுத் தூரத்தில் படகில் வந்து கொண்டிருந்த குந்தவை தேவியாகத்தான் இருக்க வேண்டும். தன்னை எதற்காக அவர் காப்பாற்றியிருக்க வேண்டும்? ஒரேயடியாக முழுகித் தொலைந்து போய் விடும்படி விட்டிருக்கக் கூடாதா? கண்களைத் திறந்து பேசுவதற்கு முடிந்தவுடனே "ஏன் என்னைக் காப்பாற்றினீர்கள்?" என்று இளையபிராட்டியுடன் சண்டை பிடிக்க வேண்டும்! தம்முடைய அருமைத் தம்பியிடம் அவருடைய அன்பு இவ்வளவுதானா?...

இதோ இளையபிராட்டி பேசுகிறார். என்ன சொல்கிறார்? யாரிடம் சொல்கிறார்? கேட்கலாம்:

"மயக்கத்தில் ஏதேதோ பிதற்றுகிறாள்! இந்த மட்டும் உயிர் பிழைத்ததே பெரிய காரியம்! நம்முடைய படகு மட்டும் இன்னும் சற்றுத் தூரத்தில் இருந்திருந்தால்? இவள் ஓடையில் விழுந்தது நம் கண்ணில் படாமற் போயிருந்தால்? — அதை நினைத்தாலே எனக்குக் கதி கலங்குகிறது!"

நாம் பாராமல் விட்டிருந்தால், ஒருவிதத்தில் நல்லதாய்ப் போயிருக்கும். இந்தப் பெண்ணின் வாழ்க்கை இனிதாக முடிந்திருக்

கும். தங்களால் உயிர் பிழைத்த கொடும்பாளூர் இளவரசி வாழ்க்கையில் எவ்வளவோ மனவேதனைப் பட வேண்டியிருக்கும்....."

ஆகா! இது யார், நம்மிடம் இன்வளவு அனுதாபத்துடன் பேசுகிறது? ஆம், அந்த வாலிபர்தான்! குடந்தை ஜோதிடர் வீட்டிலும் அரசலாற்றங்கரையிலும் பார்த்த அந்த வீர வாலிபர்தான்! இளவரசர் கடலில் முழுகிய செய்தியையும் அவரே கொண்டு வந்திருக்க வேண்டும். இன்னும் இவர்கள் என்ன பேசிக் கொள்ளப் போகிறார்கள்? கேட்கலாம். கண்ணைத் திறக்க முடியா விட்டாலும் நன்றாய்க் கேட்கிறதல்லவா!

''இது என்ன, இவ்வளவு நெஞ்சிரக்கம் இல்லாமல் பேசுகிறீர்? ஆண் பிள்ளைகளின் மனதே கல் மனதாகத்தான் இருக்குமோ?'' என்றது இளையபிராட்டியின் குரல்.

''அப்படிக் கல் நெஞ்சன் என்று தீர்ப்புக் கூறும்படியாக இப்போது நான் என்ன சொல்லி விட்டேன்?"

''இந்தப் பெண் இறந்திருந்தால் நல்லது என்று சொன்னீரே? அது போதாதா? எவ்வளவு சிரமம் எடுத்து இவளை நான் வளர்த்து வருகிறேன், தெரியுமா?.....''

''இவள் பிதற்றிய வார்த்தைகளைத் தாங்கள் கேட்டீர்களா?''

''உம்முடைய செவிகளில் என்ன விழுந்தது?''

''இளவரசரை மணந்து கொள்வது பற்றி ஏதோ சொன்னதாகக் காதில் விழுந்தது....''

''ஆம், நினைவு தெரியாத மயக்கத்திலே கூட அவளுடைய வாய் அப்படி முணுமுணுத்தது. இளவரசர் மீது ஆசை அவள் உள்ளத்தில் அப்படி வேரூன்றியிருக்கிறது.''

.''அந்த ஆசை இந்தப் பெண்ணுக்கு நல்லதல்ல! அதனால் துன்பமும் ஏமாற்றமுந்தான் ஏற்படும்.''

''ஏன் அவ்வாறு சொல்கிறீர்? இவளைக் காட்டிலும் இளவரசருக்கு ஏற்ற உயர்குலப் பெண் வேறு யார்? புராதனமான கொடும்பாளூர் வீர வம்சத்தைப் பற்றி உமக்குத் தெரியாதா?''

''நன்றாய்த் தெரியும். நான் நினைப்பது ஒன்று; தாங்கள் சொல்வது இன்னொன்று. இந்தப் பெண் எவ்வளவு உயர்குலமாயிருந்தால் என்ன? இவள் மனத்திலுள்ள சபலம் நிறைவேறப் போவதில்லை......''

''கட்டாயம் நிறைவேறியே தீரும். அது இவள் மனத்தில் உள்ள சபலம் அன்று. என்னுடைய மனோரதம்; நான் செய்திருக்கும் தீர்மானம்.''

''தங்கள் தீர்மானமாயினும் இந்த விஷயத்தில் நிறைவேறாது.''

''ஏன் மீண்டும் அவ்விதம் சொல்



கிறீர்? இளவரசர் நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் பத்திரமாயிருக்கிறார் என்று சற்று முன் நீர் கூறியது உண்மைதானே?"

ஆகா! இது என்ன இன்பமான செய்தி? இளவரசர் பத்திரமாயிருக்கிறாரா? நாகைப்பட்டினம் சூடாமணி விஹாரத்தில் இருக்கிறாரா? இந்தச் செய்தியைக் கேட்க இந்தச் செவிகள் கொடுத்து வைத்திருந்தனவே? ஓடை நீரில் முழுகிச் சாகாமல் நான் உயிர் பிழைத்தது எவ்வளவு நல்லதாய்ப் போயிற்று! இளையபிராட்டிக்கு எத்தனையோ விதத்தில் நான் நன்றிக் கடன்பட்டிருக்கிறேன். இதுவும் ஒன்று இப்போது சேர்ந்தது. ஆனால் ஐயோ! இது என்ன மேலே இவர் சொல்லும் செய்தி? செவியில் ஈயத்தைக் காய்ச்சி ஊற்றுவது போலிருக்கிறதே!

"அம்மணி! இளவரசர் பத்திரமாயிருக்கிறார் என்பது உண்மைதான். அதனால் இவருடைய ஆசை நிறைவேறும் என்பது என்ன நிச்சயம்? இளவரசர் இந்தப் பெண்ணை மணந்து கொள்ள மாட்டார் என்று நான் நினைக்கிறேன்..."

"நீர் எதை வேணுமானாலும் நினைக்கலாம். இந்த உலகில் நான் இட்ட கோட்டைத் தாண்டாமல், என் பேச்சைத் தட்டாமல் நிறைவேற்றக் கூடிய ஓர் ஆண்மகன் இருக்கிறான். அவன்தான் என் தம்பி அருள்மொழிவர்மன்!"

"இளவரசி! அத்தகையவன் நானும் ஒருவன் இருக்கிறேன்..."

"பின்னர் என்ன எனக்குக் குறைவு? என்னுடைய எண்ணம் நிறைவேறுவதற்கு என்ன தடை? பழுவேட்டரையர்கள் இதற்குக் கூடக் குறுக்கே வருவார்களா, என்ன?...."

"அது எனக்குத் தெரியாது. தங்களிடம் இளவரசருக்கு எல்லையற்ற அன்பு உண்டு என்பதை நான் அறிந்திருக்கிறேன். வேறு எந்தக் காரியத்திலும் தங்கள் வார்த்தையைக் கேட்பார். அவருக்கு இராஜ்யம் ஆளுவதில் சிறிதும் இஷ்டமில்லை. என் கண் முன்னால் இலங்கை மணி மகுடத்தை வேண்டாம் என்று மறுத்தார். ஆயினும் தாங்கள் வற்புறுத்தினால் இராஜ்யம் ஆளுவதற்குக் கூடச் சம்மதிப்பார். ஆனால் இந்தப் பெண்ணை மணப்பதற்கு....

"சம்மதிக்க மாட்டான் என்றா சொல்கிறீர்? அவ்விதம் என் அருமைத் தோழியை நிராகரிப்பதற்கு அவன் இவளிடம் என்ன குறையைக் கண்டான்? நீர்தான் என்ன கண்டீர்?"

"அம்மணி! நான் இந்தப் பெண்ணிடம் ஒரு குறையும் காணவில்லை. கண்டாலும் நம்ப மாட்டேன். இளையபிராட்டி அரண்மனையில் பணி செய்யும் எல்லாரிலும் கீழான சேடிப் பெண்ணும் எனக்குத் தேவ கன்னிகைதான். இளையபிராட்டியின் தோட்டத்தில் வாழும் முயற்குட்டி என் கண்களுக்குத் தேவேந்திரனுடைய ஐராவதத்துக்கும் மேலானதாகத் தோன்றும். இளவரசரும் இந்தப் பெண்ணிடம் குறை ஒன்றையும் காணவில்லை. ஆனால் அவருடைய மனம் வேறொரு பெண்ணிடம் சென்றிருக்கலாம் அல்லவா?...."

ஐயோ! எவ்வளவு கொடுமையான வார்த்தைகள்! இந்த வாலிபர் எதற்காக இவ்விதம் நம்முடைய புண்பட்ட உள்ளத்தில் வேலை எடுத்துக் குத்துகிறார்?

"வாணர் குலத்து வீரரே! தாங்கள் கூறுவது எனக்கு விளங்கவில்லை. என் தம்பியைப் பற்றி ஏன் இப்பேர்ப்பட்ட அவதூறு கூறுகிறீர்!

"அவதூறு ஒன்றுமில்லை, அம்மணி! உண்மையைத்தான் கூறுகிறேன். கண்ணால் கண்டு, காதினால் கேட்டதைச் சொல்லுகிறேன்..."

"மேலே சொல்லுக! எவ்வளவு கஷ்டமான விஷயத்தைக் கேட்கவும் இப்பொழுது நான் சித்தமாயிருக்கிறேன்."

"ஓடக்காரப் பெண் பூங்குழலி என்பவளைப் பற்றிச் சொன்னேன் அல்லவா? இலங்கைக்கு என்னைக் கொண்டு போய்ச் சேர்த்தவளும் அவள்தான். இளவரசரையும் என்னையும் கடலிலிருந்து காப்பாற்றியவளும் அவள்தான். சூடாமணி விஹாரத்துக்கு இளவரசரைப் படகில் ஏற்றிக் கொண்டு போயிருப்பவளும்

அவள்தான். சேந்தன் அமுதனிடம் மட்டும் நம்பி இளவரசரை நான் ஒப்புவித்து வந்திருக்க மாட்டேன். பூங்குழலியை நம்பித்தான் ஒப்புவித்திருக்கிறேன். அந்தப் பெண்ணுக்கு ஆயிரம் உயிர் இருந்தால் அவ்வளவையும் இளவரசருக்கு அர்ப்பணம் செய்வாள்...''

''அதனால் என்ன? ஓடக்காரப் பெண் ஓடக்காரிதானே? உலகமாளப் பிறந்தவனை மணப்பது பற்றி அவள் கனவு காண முடியுமா? தரையில் தத்திக் குதிக்கும் சிட்டுக் குருவி வானத்தில் உயரப் பறந்து வட்டமிடும் கருடனை ஏறிட்டுப் பார்க்க முடியுமா?''

''ஏன் முடியாது? சிட்டுக்குருவியும் கருடனை அண்ணாந்து பார்க்கலாம்; கருடனும் சிட்டுக் குருவியைக் குனிந்து பார்த்து ஆசைப்படலாம்.''

''என் தம்பியின் மனத்தில் அப்படி ஏதேனும் எண்ணம் உதித்திருந்தால் அதைப் போக்குவதற்கு நான் ஆயிற்று. கூடவே கூடாது. எத்தனையோ அபாயங்களிலிருந்து அருள்மொழி வர்மனை நான் தப்புவித்திருக்கிறேன். இந்த ஓடக்காரியின் மோக வலையிலிருந்தும் நான் தப்புவிப்பேன்...''

''ஓடக்காரியென்றால் அவ்வளவு தள்ளுபடியா? குலமும் கோத்திரமும் அவ்வளவு முக்கியமா? ஓடக்காரியின் உடம்பில் ஓடுவதும் சிவப்பு இரத்தந்தானே? அவளுடைய நெஞ்சும் அரண்மனையில் பிறந்த இளவரசிகளின் நெஞ்சைப் போல் துடிப்பதில்லையா? பார்க்கப் போனால் இளவரசிகளின் அன்பில் இராஜ்ய ஆசை முதலியவை கலந்திருக்கலாம். ஆனால் அந்த ஓடக்காரப் பெண்ணின் அன்பு மாசற்றது; புனிதமானது. இளவரசரும் அவ்வாறுதான் நம்புகிறார். மற்றவர்கள் ஏன் குறுக்கே வந்து தடை செய்ய வேண்டும்? இப்போது, வந்து, வந்து, ஊஹூம் — என் விஷயத்தையே எடுத்துக் கொள்ளுங்கள். என்னுடைய நெஞ்சைப் பிளந்து அதனுள் இருப்பதைத் தங்களுக்கு நான் வெளியிட்டுக் காட்ட முடியுமானால்....''

''வேண்டாம், வேண்டாம். உம்முடைய நெஞ்சில் இருப்பது அப்படியே பத்திரமாய் இருக்கட்டும். அதுதான் நல்லது. அன்பு, ஆசை, காதல் என்பனவையெல்லாம் உலகில் பிறந்த மற்றவர்களுக்குச் சரிதான். ஆனால் இராஜ்யம் ஆளப் பிறந்தவர்களின் விஷயமே வேறு. அவர்கள் இராஜ குலத்திலேயே கலியாணம் செய்து கொள்ள வேண்டும். மனத்தைச் சிதற விடக் கூடாது. தவறினால் அதன் மூலம் பல தொல்லைகள் ஏற்படும். எங்கள் குடும்பத்திலேயே அதற்குத் தகுந்த உதாரணம் இருக்கிறது. என் தந்தையின் இளம் பிராயத்தில், — இராஜ்யம் அவருக்கு வரும் என்ற உத்தேசமே இல்லாத போது, — இப்படித்தான் காட்டில் வளர்ந்த ஒரு பெண்ணை....! ஆனால் இதையெல்லாம் இப்போது உமக்கு நான் எதற்காகச் சொல்ல வேண்டும்? இந்தப் பெண்ணுக்கும் மூர்ச்சை தெளிந்து, சுயநினைவு வந்து கொண்டிருக்கிறது. கண்ணிமைகள் அசைகின்றன. வேறு ஏதேனும் சொல்வதற்கு இல்லையா? ஈழ நாட்டில் இன்னும் பல அபாயங்களுக்கு நீங்கள் உள்ளானதாகச் சொன்னீர் அல்லவா? அதைச் சொல்லுங்கள்.''

''ஆம், இளவரசி! இலங்கைச் சிம்மாசனத்தையும் மணி மகுடத்தையும் இளவரசர் மறுத்து விட்டு வந்த அன்று இரவு நாங்கள் அநுராதபுரத்தின் வீதிகளில் வந்து கொண்டிருந்த போது, திடீரென்று ஒரு கட்டடத்தின் முன்பகுதி இடிந்து விழுந்தது. ஒரு கண நேரம் நாங்கள் அங்கே தாமதித்திருந்தால் எங்கள் தலையில் விழுந்திருக்கும். உயிரோடு சமாதி ஆகியிருப்போம். அச் சமயத்தில் ஒரு பெண்மணி திடீரென்று அங்கே தோன்றினாள். சமிக்ஞை செய்து இளவரசரை அழைத்தாள்....''

''கடவுளே! அங்கேயும் ஒரு பெண்தானா உங்களைக் காப்பாற்றுவதற்கு? அந்தப் பெண் யார்?''

''அவள் யாரோ எனக்குத் தெரியாது. ஆனால் இளவரசருக்கு முன்னால் பழக்கமுள்ளவளாகத் தோன்றியது... வீண் சந்தேகந்

துக்கு ஆளாக வேண்டாம், அம்மணி! அந்த அம்மாள் பிராயம் முதிர்ந்தவள்....."

"எவ்வளவு பிராயம் இருக்கும்?"

"இளவரசரின் அன்னையாக இருக்கக் கூடியவள். அதோடு காது செவிடு, வாயும் ஊமை!"

"என்ன? என்ன? இன்னொரு தரம் சொல்லுங்கள்!"

"பிறவிச் செவிடும் ஊமையுமான ஒரு மூதாட்டி அவள். பிராயம் நாற்பத்தைந்துக்கு மேல் இருக்கும்......"

"ஐயா! அப்படி ஒரு மூதாட்டியை ஈழநாட்டில் பார்த்தீரா? அவளைப் பற்றி மேலும் சொல்லுங்கள். அவளுடைய பிறப்பு வளர்ப்பைப் பற்றி ஒன்றும் தெரியாதா? அவள் எங்கே பிறந்தவள்?"

"ஈழநாட்டை அடுத்துக் கடலில் உள்ள ஒரு தீவில் பிறந்தவள்...."

இளவரசி குந்தவைதேவி அளவிலாத பரபரப்பை அடைந்து, "ஐயா! இன்னும் சொல்லுங்கள்! பார்ப்பதற்கு அவள் எப்படியிருக்கிறாள்?" என்றாள்.

"அம்மணி! அவளுடைய தோற்றத்தில் ஓர் அதிசயத்தைக் கண்டேன். அதைச் சொல்வதற்கே எனக்குத் தயக்கமாயிருக்கிறது."

"தயக்கம் வேண்டாம்! சீக்கிரம் சொல்லுங்கள்."

"சோழ நாட்டில் நான் பார்த்த ஒரு பெண்ணைப் போலவே அவள் இருந்தாள். வயது மட்டுந்தான் அதிகம். ஆடை ஆபரணங்கள் பூணாமல் தலைவிரி கோலமாயிருந்தாள். மற்றபடி இங்கே நான் பார்த்த பெண்ணைப் போலவே தோன்றினாள். அதே முகம்; அதே தோற்றம்; உண்மையில் நான் ஒரு நிமிஷம் ஏமாந்து போய் விட்டேன்."

"ஐயா! அப்படிப்பட்ட பெண்—இங்கே உள்ளவள், — யார்?"

"இளவரசி! தங்களால் ஊகித்துத் தெரிந்து கொள்ள முடியவில்லையா?"

"நானா? இந்தப் பெண் வானதியா? தஞ்சை அரண்மனையில் உள்ள என்னுடைய அன்னையா?"

"நீங்கள் குறிப்பிட்ட யாரும் இல்லை."

"பழுவூர் இளையராணி நந்தினியா?"

"ஆம், நந்தினிதான்!"

"கடவுளே! அப்படியானால் நான் சந்தேகித்தது உண்மைதான்."

"என்ன சந்தேகித்தீர்கள்?"

"விஷ நாகத்தை விடக் கொடியவள் என்று எண்ணி நான் வெறுத்தவள் உண்மையில் என் தமக்கையாக இருக்கலாமோ என்று சந்தேகித்தேன். அது நிஜமென்று தாங்கள் சொல்வதிலிருந்து தெரிந்தது. விதியின் கொடுமையே கொடுமை. இதிலிருந்து குலம் கோத்திரம் தெரியாத ஒரு பெண்ணை அரச குலத்தைச் சேர்ந்தவர் மணப்பது எவ்வளவு பிசகு என்று தெரிகிறது."

"அம்மணி! நான் அவ்விதம் குலம் கோத்திரம் தெரியாதவன் அல்ல. எங்கள் மூதாதையர் முந்நூறு வருஷங்களாகச் செந்தமிழ் நாட்டை ஆண்டு வந்தார்கள். சேர சோழ பாண்டியர்களைச் சிறையில் அடைத்தார்கள். இன்றைக்கு எனக்கு இராஜ்யமில்லாத போதிலும் என் கையில் வாள் இருக்கிறது; என் தோளில் வலிமை இருக்கிறது; என் நெஞ்சில் தைரியம் இருக்கிறது......"

"ஐயா! தங்கள் பெருமைகளைக் கொஞ்சம் பின்னால் கேட்டுக் கொள்கிறேன். உடனே செய்வதற்குப் பல காரியங்கள் இருக்கின்றன. உம்முடைய உதவி இன்னமும் எனக்குத் தேவை. அளிப்பீர் அல்லவா?"

"எனக்கு ஆயிரம் உயிர் இருந்தால் அவ்வளவையும் தங்களுக்காகக் கொடுக்கச் சித்தமாயிருப்பேன்."

"ஓடக்காரப் பெண் பூங்குழலிக்கு நீர் உடன் பிறந்தவர் போலிருக்கிறது. நல்லது; அந்தப் பேச்சு இப்போது வேண்டாம். இதோ, இந்தப் பெண் கண்ணைத் திறக்கப் போகிறாள்......"

ஆம்; இதற்குள் வானதிக்குப் பூரண நினைவு வந்துவிட்டது. உடம்பிலும் சக்தி பிறந்துவிட்டது. மனத்தில் பலபல யோசனைகள் உதித்தன. இளவரசியிடம் அந்த ஓடக்

காரப் பெண்ணின் அன்பை விடத் தன்னுடைய அன்பு அதிகமானது என்பதை நிரூபிக்கும் வரையில் தான் உயிரோடிருக்க வேண்டும் என்று தீர்மானித்தாள். அத்துடன் தஞ்சை அரண்மனையில் சக்கரவர்த்தி படுத்திருந்த அறையில் அன்றொரு நாள் இரவு தான் கண்ட காட்சியும் கேட்ட புலம்பலும் நினைவுக்குவந்தன. அவற்றின் பொருளும் ஒருவாறு விளங்கத் தொடங்கி விட்டது.

வானதி கண்விழித்ததும் இளைய பிராட்டி, "என் கண்ணே! உனக்கு இப்போது எப்படியிருக்கிறது?" என்று அன்போடு கேட்டாள்.

"எனக்கு ஒன்றுமில்லை, அக்கா! தங்களுக்குத் தொந்தரவு கொடுத்து விட்டேனே என்பதை நினைத்தால் தான் சங்கடமாயிருக்கிறது" என்றாள்.

அச்சமயத்தில் ஆழ்வார்க்கடி



யான் பிரவேசித்து, "நானும் தொந்தரவு கொடுக்கத்தான் வந்திருக்கிறேன், தேவி! அரண்மனை வாசலில் ஒரே ஜனக் கூட்டமும் குழப்பமுமாயிருக்கிறது. இளவரசர் கடலில் மூழ்கிவிட்டது பற்றி ஜனங்கள் ஒரே ஆத்திரமாயிருக்கிறார்கள். தாங்கள் உடனே வந்து சமாதானம் சொல்லா விட்டால் விபரீதம் நேரலாம்" என்றான்.

## அத்தியாயம் 25

# முதன் மந்திரி வந்தார்


ழையாறை நகரின் வீதிகள் அன்று வரை என்றும் கண்டிராதபடி அல்லோலகல்லோலமாயிருந்தன. அத்தொன்னகரில் இராஜமாளிகைகள் இருந்த பகுதியை நோக்கி ஜனங்கள் திரள் திரளாகப் போய்க் கொண்டிருந்தார்கள். ஆண்களும் பெண்களும் வயோதிகர்களும் வாலிபர்களும் சிறுவர்களும் கூட்டம் கூட்டமாகச் சென்றார்கள். சைவர்களும் வைஷ்ணவர்களும் புத்தர்களும் சமணர்களும் அக்கூட்டத்தில் கலந்திருந்தார்கள். கடும்விரதங்கள் கொண்ட காலாமுகர்கள் சிலரும் அக்கூட்டத்தில் ஆங்காங்கு காணப்பட்டார்கள். மக்களில் அநேகர் அழுது புலம்பிக் கொண்டு சென்றார்கள். பலர் பழுவேட்டரையர்களை வாயாரச் சபித்துக் கொண்டு சென்றார்கள்.

வாலிபர்கள் சிலர் ஆங்காங்கே கையில் கழிகளுடன் காணப்பட்டார்கள். அவர்கள் அவ்வப்போது ஒருவருடைய கழியை இன்னொருவர் தட்டி ஓசைப்படுத்திக் கொண்டு சென்றார்கள். கழி அடிபடும் ஓசை கேட்டதும் "பழுவேட்டரையர்களின் தலையில் அப்படிப் போடு!" என்று சிலர் மெதுவாகச் சொன்னார்கள். சிலர் அவ்வாறு சத்தம் போட்டுக் கத்தினார்கள். சத்தம் போட்டுக் கத்தியவர்களில் காலாமுகர்கள் முக்கியமாயிருந்தவர்கள்.

பழையாறையிலிருந்த முக்கியமான இராஜமாளிகைகளின் முன் முகப்புக்கள் பிறைச் சந்திரன் வடிவமாக அமைந்திருந்தன. எல்லா மாளிகைகளுக்கும் சேர்ந்து முன் பக்கத்தில் விசாலமான நிலா முற்றம் இருந்தது. விசேஷமான சந்தர்ப்பங்களில் பதினாயிரக்கணக்கான மக்கள் கூடி நிற்கும்படியாக அந்த நிலா முற்றம் விசாலமாயிருந்தது. முற்றத்தைச் சூழ்ந்து வெளிப்புறத்தில் உயரமான மதில் சுவர் இருந்தது. அந்த மதில் சுவருக்கு மூன்று வாசல்கள் இருந்தன. ஒவ்வொரு வாசலிலும் சில அரண்மனைச் சேவகர்கள் காவல் புரிந்தார்கள்.


ரள் திரளாக வந்து கொண்டிருந்த கூட்டம் நிலா முற்றத்தின் மூன்று வாசல்களின் அருகிலும் வந்து சேர்த் தொடங்கியது. வினாடிக்கு வினாடி கூட்டம் அதிகமாகிக் கொண்டிருந்தது. செய்தி கொண்டு வந்திருந்த இருவரையும் அவர்களை அழைத்து வந்த ஊர்ச் சேவகர்களையும் மட்டும் அரண்மனைக் காவலர்கள் உள்ளே விட்டார்கள். மற்றவர்களைத் தடுத்து நிறுத்தினார்கள். ஆனால் வெகுநேரம் தடுத்து நிறுத்தி வைக்க முடியவில்லை. கூட்டத்தில் எங்கிருந்து கிளம்புகின்றன என்று தெரியாதபடி சில குரல்கள் 'உள்ளே போங்கள்! உள்ளே போங்கள்!' என்று கூவின. பின்னாலிருந்தவர்கள் முன்னாலிருந்தவர்களைத் தள்ளினார்கள். கடலின் அலைகள் ஒன்றை ஒன்று தள்ளிக் கொண்டு வந்து கடைசிப் பேரலையைக் கரையிலே போய் மோதும்படி செய்கின்றனவல்லவா? அது போலவே இந்த ஜன சமுத்திரத்திலும் நடந்தது.

முன்னாலிருந்தவர்கள் பின்னால் வந்தவர்களால் மோதப்பட்டு வாசற் காவல் புரிந்த சேவகர்களைத் தள்ளிக் கொண்டு உள்ளே புகுந்தார்கள். அவ்வளவுதான்;

காவேரிக் கரையில் சிறிய உடைப்பு எடுத்தாலும் வரவரப் பெரிதாகி வெள்ளம் குபுகுபுவென்று பாய்வது போல் ஜனங்கள் நிலா முற்றத்தில் தடதடவென்று பிரவேசித்தனர். சிறிது நேரத்துக்குள் நிலா முற்றம் நிறைந்து விட்டது. ஆயிரக்கணக்கான மக்கள் அங்கே சேர்ந்துவிட்டார்கள்.

இப்படி ஜனங்கள் கட்டுக்காவல்களை மீறி நிலா முற்றத்தில் புகுந்து கொண்டிருந்த போது ஏற்பட்ட ஆரவாரத்தைத்தான் செம்பியன் மாதேவி மதுராந்தகனோடு பேசிக் கொண்டிருக்கையில் கேட்டார். குமாரனுடன் வாதாடுவதை அத்துடன் நிறுத்திவிட்டு அரண்மனை மேல் மாடத்தில் முன் முகப்புக்கு வந்து சேர்ந்தார். தெய்வீகக் களை பொருந்திய அப்பெரு மூதாட்டியின் திருமுகத்தையும், கூப்பிய கைகளுடன் அவர் நின்ற சாந்தமான தோற்றத்தையும் பார்த்ததும் அந்த ஜன சமுத்திரத்தின் ஆரவாரம் அடங்கியது. சில வினாடி நேரம் அங்கே நிச்சப்தம் குடி கொண்டிருந்தது.

"தாயே! எங்கள் இளவரசர் எங்கே? பொன்னியின் செல்வர் எங்கே? தங்கள் கண்ணுக்குக் கண்ணான அருள்மொழி வர்மர் எங்கே?" என்று அக்கூட்டத்தில் சில குரல்கள் எழுந்தன. அவ்வளவுதான்; அந்த ஜன சமுத்திரத்தில் முன்னைவிடப் பல மடங்கு ஆரவாரம் கிளம்பி விட்டது.

செம்பியன் மாதேவி ஒன்றும் புரியாதவராகத் திகைத்து நின்றார். பழையாறை மக்களின் இதயங்களைக் கொள்ளை கொண்டிருந்த பொன்னியின் செல்வனுக்கு ஏதோ ஆபத்து நேர்ந்து விட்டது என்பதை மட்டும் அறிந்தாள். அது என்ன ஆபத்து? எப்படி நேர்ந்தது? பழுவேட்டரையர்களே ஏதேனும் விபரீதமான காரியம் செய்து சோழ குலத்துக்கும் மதுராந்தகனுக்கும் அழியாத பழியை உண்டாக்கி விட்டார்களோ?

இச்சமயத்தில் தஞ்சாவூர்த் தூதர்கள் இடித்துப் பிடித்து ஜனங்களைத் தள்ளிக் கொண்டு முன்னால் வந்து சேர்ந்தார்கள். அவர்களை அழைத்துக்கொண்டு வந்த சேவகர்களில் ஒருவன், "பெருமாட்டி! இவர்கள் தஞ்சாவூரிலிருந்து முக்கியமான செய்தி கொண்டு வந்திருக்கிறார்கள்!" என்றான். செம்பியன் மாதேவி ஜனக் கூட்டத்தைப் பார்த்துக் கை அமர்த்திவிட்டுத் தூதர்களை நோக்கி, "என்ன செய்தி கொண்டு வந்தீர்கள்!" என்று கேட்டார்.

"தாயே! மிகத்துயரமான செய்தி கொண்டு வந்திருக்கும் அபாக்கிய சாலிகள் நாங்கள். சக்கரவர்த்தியின் கட்டளையின் பேரில் இளவரசர் அருள்மொழி வர்மர் இலங்கையிலிருந்து கோடிக்கரைக்குக் கப்பலில் வந்து கொண்டிருந்தார். வரும் வழியில் சுழிக்காற்றில் கப்பல் அகப்பட்டுக் கொண்டு விட்டது. துணையாக வந்த கப்பல் உடைந்து முழுகி விட்டது. அதிலிருந்தவர்களைக் காப்பாற்றுவதற்காக இளவரசர் கடலில் குதித்தார். பிறகு அகப்படவில்லை. கடலிலும் கடற்கரையெங்கும் தேடுவதற்கு ஏற்பாடு செய்திருக்கிறது. சக்கரவர்த்தியும் மலையமான் மகளாரும் இச்செய்தியைக் கேட்டுப் பெருந்துயரில் ஆழ்ந்திருக்கிறார்கள். தங்களையும் மதுராந்தகத் தேவரையும் இளையபிராட்டியையும் உடனே புறப்பட்டுத் தஞ்சைக்கு வரும்படி சக்கரவர்த்தி எங்கள் மூலம் செய்தி அனுப்பியிருக்கிறார்!"

இவ்வாறு தூதர்கள் கூறியது செம்பியன் மாதேவியின் காதிலும் விழுந்தது. அதே சமயத்தில் ஜனக் கூட்டத்தின் செவிகளிலும் விழுந்தது.

செம்பியன் மாதேவியின் கண்களில் நீர் தாரை தாரையாகப் பெருகியது. அதைப் பார்த்த ஜனங்கள் மேலும் 'ஓ' என்று கதறினார்கள்.

கூட்டத்தில் முன்புறம் இருந்தவர்களில் ஒருவர் "தாயே! தாங்கள் தஞ்சை போகக் கூடாது! இளைய பிராட்டியும் தஞ்சைக்குப் போகக் கூடாது. சக்கரவர்த்தியை இங்கே வரும்படி செய்ய வேண்டும்' என்று

கூவினார்.

''பொன்னியின்செல்வர்கடலில் மூழ்கிவிட்டார் என்பது பொய். பழுவேட்டரையர்கள்தான் அவரைக் கொன்றிருப்பார்கள்!'' என்றார் இன்னொருவர்.

''மதுராந்தகரும் இனித் தஞ்சைக்குப் போகக் கூடாது. இங்கேயே இருக்க வேண்டும்!'' என்று இன்னொரு குரல் கேட்டது.

''இளைய பிராட்டி எங்கே? அவரை நாங்கள் பார்க்க வேண்டும்!'' என்று பல குரல்கள் கூவின.

செம்பியன் மாதேவி தன் அருகிலிருந்த சேடிகளில் ஒருத்தியைப் பார்த்து இளவரசியை அழைத்து வரச் சொன்னார்.

கீழே கூட்டத்தில் கலந்து நின்று கொண்டிருந்த ஆழ்வார்க்கடியானும் அதே சமயத்தில் அங்கிருந்து நகர்ந்து சென்றான். பழையபடி குறுக்கு வழியில் விரைவாகச் சென்று குந்தவை தேவி வானதியை மூர்ச்சை தெளிவித்துக் கொண்டிருந்த கொடி வீட்டைக் கண்டு பிடித்தான். வந்தியத்தேவனிடம் இளைய பிராட்டி கூறிய கடைசி வார்த்தைகளைக் கேட்டுக் கொண்டே சென்று அரண்மனை முற்றத்தில் நடக்கும் அமர்க்களத்தைப் பற்றி அறிவித்தான்.

இளையபிராட்டி வானதிக்குச் சைத்யோபசாரம் செய்யும் வேலையைப் பணிப் பெண்களிடம் ஒப்பு வித்து விட்டு, அவசரமாகக் கிளம்பினாள்.





ளைய பிராட்டி குந்தவை தேவி அரண்மனை மேல் மாட முகப்பில் செம்பியன் மாதேவியின் அருகில் நெருங்கிய போது அந்த மூதாட்டியின் கண்களிலிருந்து கண்ணீர் பெருகுவதைக் கவனித்தாள். அந்தக் காட்சி குந்தவையின் கண்களிலும்கண்ணீர்பெருகச்செய்தது. இதைக் கண்ட ஜன சமூகம் மேலும் துயர சாகரத்தில் மூழ்கியது.

''பொன்னியின் செல்வர் கடலில் மூழ்கவில்லை. பழுவேட்டரையர்கள்கொன்றுவிட்டார்கள். அவர்களைப் பழிக்குப் பழிவாங்க வேண்டும்!''

''சக்கரவர்த்தியைப் பழுவேட்டரையர்கள் சிறையில் வைத்திருக்கிறார்கள். அவரை விடுவித்து அழைத்து வரவேண்டும். இளவரசி கட்டளையிட்டால் இந்தக் கணமே நாங்கள் புறப்படச் சித்தமாயிருக்கிறோம்.''

இவ்வாறெல்லாம் அந்தக் கூட்டத்திலிருந்தவர்கள் இளைய பிராட்டியைப் பார்த்துக் கூவினார்கள்.

குந்தவையின் மனம் தீவிரமாகச் சிந்தித்தது. இளவரசர் உயிரோடிருக்கிறார் என்ற உண்மையை இப்போது வெளியிடக் கூடாது. ஆனால் ஜனங்களையும் சமாதானப்படுத்தி அனுப்ப வேண்டும். அதற்கு ஒரு வழி தோன்றியது.

கண்ணில் பெருகிய கண்ணீரைத் துடைத்துக் கொண்டு ஜனக்கூட்டத்தின் முன் வரிசையில்நின்றவர்களை இளவரசி நோக்கினாள். அதற்குள் ஆழ்வார்க்கடியானும் வந்தியத்தேவனும் அங்கே வந்து நின்று கொண்டிருந்தார்கள். ஆழ்வார்க்கடியானைப் பார்த்து இளைய பிராட்டி மேலே வரும்படி சமிக்ஞை செய்தாள். ஆழ்வார்க்கடியான் அவ்விதமே மேலே ஏறிச் சென்றான். அவனிடம் குந்தவை மெல்லிய குரலில் ஏதோ கூறினாள்.

ஆழ்வார்க்கடியான் ஜனங்களைப் பார்த்துக் கையமர்த்தினான். இடிமுழக்கம்போன்றபெரிய குரலில் கூறினான்: ''பொன்னியின் செல்வர் இறந்திருப்பார் என்று

இளையபிராட்டியினால் நம்பமுடிய வில்லை. முன்னொரு சமயம் காவேரித் தாய் இளவரசரை ஏந்திக் காப்பாற்றியது போல் சமுத்திர ராஜனும் அவரைக் காப்பாற்றி யிருப்பார் என்று நம்புகிறார். நிமித் தக்காரனைக் கேட்டதில் அவனும் அப்படியே சொல்கிறானாம். இள வரசரைத் தேடிக் கண்டுபிடிக்க இளையபிராட்டி தக்க ஏற்பாடு செய்வார். உங்களையெல்லாம் நிம் மதியாக வீட்டுக்குத் திரும்பிப் போகும்படி கேட்டுக் கொள் கிறார்!''

இதைக் கேட்டதும் அந்த ஜனக் கூட்டத்தில் ஒரு பெரிய ஆசுவாச நெடுமூச்சைப்போன்றசத்தம்எழுந் தது.

''நிமித்தக்காரன் எங்கே? அவன் வாயினால் நாங்களும் அந்த நல்ல செய்தியைக் கேட்கிறோம்'' என் றார் ஒருவர்.

இதுதான் சமயம் என்று வந்தியத் தேவன் தாவிக் குதித்து மேல்மாடத் துக்குச் சென்றான்.

ஆழ்வார்க்கடியான் அருகில் போய் நின்றுகொண்டு, ''இளவரச ருக்குப் பெரிய கண்டம் நேர்ந்தது உண்மைதான். ஆனால் அவருடைய உயிருக்கு அபாயம் ஒன்றும் நேர வில்லை. விரைவில் கிடைத்து விடு வார்!'' என்றான்.

''உனக்கு எப்படித் தெரியும்?'' என்றது ஒரு குரல்.

''நான் நிமித்தக்காரன். கிர ஹங்களையும் நட்சத்திரங்களை யும் பார்த்து அறிந்துகொண்டேன். நிமித்தங்களைப் பார்த்தும் தெரிந்து கொண்டேன்.''

''பொய்! நீ சொல்வது பொய்! நீ நிமித்தக்காரன் அல்ல! நீ ஒற் றன்!'' என்றது அதே குரல்.

வந்தியத்தேவன் அந்தக் குரலுக்கு உரியவனைக் கவனித்துப் பார்த் தான். அவன் வைத்தியர் மகன் என் பதை அறிந்து கொண்டான்.

''பைத்தியக்காரா! என்னையா ஒற்றன் என்று சொல்கிறாய்? நான் ஒற்றனாயிருந்தால், யாருடைய ஒற் றன்?'' என்று கேட்டான்.

''பழுவேட்டரையர்களு டைய ஒற்றன்!'' என்று வைத்தியர் மகன் பளிச்சென்று மறுமொழி



கூறினான்.

''என்ன சொன்னாய்?'' என்று வந்தியத்தேவன் கர்ஜித்தான்.

ஜனங்கள் கீழே நின்ற நிலா முற் றத்திலிருந்து வந்தியத்தேவன் நின்ற மேல் மாடம் பன்னிரண்டு அடி உய ரத்தில் இருந்தது. அதை அவன் பொருட்படுத்தாமல் மேல்மாடத்தி லிருந்து வைத்தியர் மகன் பேரில் பாய்ந்தான்.

இருவருக்கும் துவந்த யுத்தம் ஆரம்பமாயிற்று. சண்டை என்றால் எல்லாருக்கும் எல்லாக் காலத்திலும் வேடிக்கை பார்ப்பதில் பிரியம் உண்டு அல்லவா?

வந்தியத்தேவனுக்கும் வைத்தியர் மகனுக்கும் சண்டை நடந்த இடத் தைச் சுற்றி இடைவெளிவிட்டு ஜனங்கள் வட்ட வடிவமாக நின்று வேடிக்கை பார்க்கத் தொடங் கினார்கள்.

மேல் மாடத்தில் இருந்தவர்கள் கவலையுடன் அதை நோக்கினார் கள்.

ஜனக் கூட்டத்தில் பெரும்பா லோர் விஷயம் இன்னதென்று தெரிந்துகொள்ளாமலே முன்னை விட அதிகக் கூச்சல் போடத் தொடங்கினார்கள்.

இச்சமயத்தில் வாசற் பக்கத்தி லிருந்து சங்கநாதமும் கொம்புக ளின் முழக்கமும் கேட்டன.

''முதன் மந்திரி அநிருத்தப்பிரம்ம ராயர் வருகிறார், வழிவிடுங்கள்!'' என்ற குரல் முழக்கமும் கேட்டது.

அந்தப் பெருங்கூட்டத்தில் முதன் மந்திரிக்குத் தானாகவே வழி ஏற் பட்டது.

(தொடரும்)

# ஆயுர்வேத முறையில் புற்று நோய்க்கு சிகிச்சை



சிவசங்கர் ஸ்வாமியாகிய எனக்கு வயது 30. எனது வலது காலில் நியூரோ ஃபைப்ரோ சர்கோமா (Neuro Fibro Sarcoma) வியாதியினால் நான் அல்லல்பட்டுக் கொண்டிருந்தேன். பெங்களூரிலும் பம்பாயிலும் சஸ்திர சிகிச்சை நான்கு முறை செய்து கொண்டேன். கெமோ தெரபி (Chemo Therapy) எடுத்துக்கொண்டும் குணம் தெரியவில்லை. எனது முழுக் காலையும் வெட்டி எடுத்துவிட வேண்டும் என்று டாக்டர்கள் சொல்லியும் நான் அதற்குச் சம்மதிக்கவில்லை.

நான் நம்பிக்கை தளர்ந்த நேரத்தில் புற்று நோய் பற்றிய விளம்பரத்தைச் சில பத்திரிகைகளில் பார்க்கும்படி நேர்ந்தது. அதில் புற்றுநோய்க்கு ஆயுர்வேத முறையில் ஹைதராபாத் சிக்கட்பள்ளியில் உள்ள டாக்டர் பாபு ராவ் சிகிச்சை பற்றித் தெரிந்து கொண்டேன்.

நான் நேரில் சென்று இரண்டு வாரங்கள் மருந்து சாப்பிட்டதில் வெகுவாக குணம் தெரிந்தது. மேலும் ஆறு மாதங்கள் தொடர்ந்து மருந்து சாப்பிட்டேன். இப்பொழுது நான் பூரண குணம் அடைந்திருக்கிறேன். நான் இந்த விளம்பரம் செய்வதன் நோக்கம் என்னவென்றால் இதே வியாதியினால் கஷ்டப்படும் மற்ற நோயாளிகள் டாக்டர் பாபு ராவை அணுகிச் சிகிச்சை பெற்றுக் குணம் பெறலாம்.

சுவாமி சிவசங்கர்,
மலர், பாரத் பெட்ரோலியம் கார்ப்பொரேஷன்,
ஒமர்கா போஸ்ட் தாலுகா, ஒஸ்மானாபாத் ஜில்லா, மஹாராஷ்ட்ரா.

கால அட்டவணை

| விலாசம் | போன் நெம்பர் | பார்க்கும் கிழமைகள் |
|---|---|---|
| டாக்டர் எம். பாபு ராவ் விடு<br>கேன்ஸர் இன்பர்மரி:<br>2—1610, செடம் ரோடு,<br>மொமுலா கூடம், (பெட்ரோல் பங்க் அருகில்),<br>குல்பார்கா (கர்னாடகா) | 21452 | பிரதி திங்கள் செவ்வாய் |
| C/o. ஹோட்டல் மிட்டவுன்<br>அன்டேரி (மேற்கு ரயில்வே ஸ்டேஷன் எதிரில்),<br>பம்பாய். | 6288882 | பிரதி புதன் |
| கேன்ஸர் இன்பர்மரி<br>1—1—271/3, சிக்கட்பள்ளி<br>பஸ் ஸ்டாண்டு அருகில்,<br>ஹைதராபாத் — 500 020. | 64735 | பிரதி வெள்ளி |
| C/o. ராம் இன்டர்நேஷனல்,<br>114, கோடம்பாக்கம் நெடுஞ்சாலை,<br>சென்னை — 600 034. | 473350<br>473422 | பிரதி சனி |
| C/o. ஹோட்டல் பிருந்தாவன்<br>மஹாத்மா காந்தி ரோடு,<br>பெங்களூர். | 573271 | பிரதி ஞாயிறு |



# நட்சத்திர நடிகர்களுடன் கைகுலுக்கும் கார்ட்டூன்கள்!

**கா**ர்டூன் படங்கள் தயாரிப்பதில் முடிசூடா மன்னர் வால்ட் டிஸ்னி. இவருடைய படைப்புகளுள் மிகப் பிரபலமான 'மிக்கி மவுஸ்' உலகெங்கிலும் பல லட்சம் பேரின் மனங்கவர்ந்த கற்பனைப் பாத்திரம். மிக்கி மவுஸ் படைக்கப்பட்டு அறுபது ஆண்டுகள் ஆகிவிட்டன. அதன் பிறகு டிஸ்னி ஸ்டுடியோ, ஸ்நோ ஒயிட், ஸிண்ட்ரெல்லா போன்ற பல முழுநீள கார்ட்டூன் சித்திரப் படங்களைத் தயாரித்திருக்கிறது. நட்சத்திரங்களை நடிக்கச் செய்தும் 'டிரெஷர் ஐலண்ட்' போன்ற பல சிறந்த படங்களைத் தயாரித்துள்ளது. இப்போது முதன் முறையாக, நடிக நட்சத்திரங்களையும் கார்ட்டூன்களையும் இணைத்து ஒரு திரைப்படம் தயாரிக்கும் சாதனையைப் புரிந்திருக்கிறது! இதற்காக டிஸ்னி நிறுவனம், 'ரோஜர் ராபிட்' என்று ஒரு புதிய கார்ட்டூன் முயல் கதா பாத்திரத்தை உருவாக்கியுள்ளது.



தனது முதல் படத்திலேயே உலகின் மிகப் பிரபலமான நடிகர்களுடன் சேர்ந்து நடிக்கப் போகிறது ரோஜர் ராபிட்! — பாப் ஹாஸ்கின்ஸ், கிறிஸ்டபர் லாயிட் போன்ற நட்சத்திரங்களுடன் ரோஜர் ராபிட் சிரித்துப் பேசி, குத்துச் சண்டை போட்டு, உறவாடும். இப்படத்தின் பெயர் **'Who Framed Roger Rabbit?'**

படத்தின் கதாநாயகி, ஜெஸ்ஸிகா என்ற கவர்ச்சிக் கன்னி. இவளும் கார்ட்டூன் பாத்திரம்தான். ரோஜர் ராபிட்டின் பேரில் அபாண்டமாகக் கொலைக் குற்றம் சாட்டப்பட, துப்பறியும் நிபுணராக நடிக்கும் பாப் ஹாஸ்கின்ஸ் ரோஜரை எப்படிச் சிக்கலிலிருந்து விடுவிக்கிறார் என்பதே கதை.

**ம**னிதர்களும் கார்ட்டூன் பாத்திரங்களும் இணைந்து தோன்றும் காட்சிகளில் மனிதர்களைத் தனியே படம் பிடித்துவிட்டு, தனியே வரையப்பட்ட கார்ட்டூன் சித்திரங்களைப் படமெடுத்து, இரண்டையும் இணைத்துள்ளார்கள். **Special Effects Studio** —வில் ஒளி மற்றும் நிழலைக் கூட்டியும் குறைத்தும் கார்ட்டூன்களுக்கு முப்பரிமாணத் தோற்றம் ஊட்டியுள்ளார்கள்.

கார்ட்டூன் சித்திரங்களை 'இயக்கும்' (இதை **animation** என்பார்கள்) பொறுப்பை ஏற்றுள்ள ரிச்சர்ட் வில்லியம்ஸ் இத்துறையில் ஆஸ்கார் விருது பெற்றவர். பத்து வினாடிகளே நீடிக்கும் ஒரு காட்சிக்கு இவர் இரண்டு வாரங்கள் உழைத்து, 1440 படங்களை வரைய வேண்டியிருந்தது என்று அறியும்போது இம்முறையில் ஒரு முழு திரைப்படத்தைத் தயாரிப்பது எவ்வளவு பெரிய சாதனை என்று வியப்பு ஏற்படுகிறது.

நன்றி: **டைம், நியூஸ்வீக்.**

உருது மொழிக் கதை



# சோகத்தைப் பொழிந்த குழல்

வில்லியம் மாக்பெய்ன் தமது மனைவியுடன் உலக சுற்றுப் பயணம் செய்து வர வேண்டுமென்று தீர்மானித்த போது அவருக்கு வயது அறுபதைத் தாண்டி விட்டது. மிகப் பழைமையான பொருள்களையும் அசாதாரணமான அபூர்வப் பொருள்களையும் வாங்குவதில் மிகுந்த ஆவலுடையவர். அவர் புதிய இடங்களுக்குப் போகும் போதெல்லாம் அங்கு தம் மனத்தைக் கவரும் அரிய பொருட்களை வாங்கிச் சேர்ப்பதை வழக்கமாகக் கொண்டிருந்தார்..

அவரது நீண்ட பிரயாணத் திட்டத்தில் டெல்லியையும் சேர்த்திருந்தார். டெல்லி செங்கோட்டையைச் சுற்றிப் பார்த்த பின் ஜும்மா மசூதிக்குச் செல்லும்படி கார் டிரைவரிடம் சொன்னார். அங்கு சென்று நடைபாதை எங்கும் விற்பனைக்காகப் பரப்பி வைக்கப்பட்டிருந்த சாமான்களை அலட்சியப்படுத்தாமல் பார்த்துக் கொண்டே அந்தப் புனிதமான மசூதியைச் சூழ்ந்துள்ள

சுரேந்திர பிரகாஷ்

கடைகளையும் சுற்றிப் பார்த்து வந்தார். பிறகு குறுகலான, இருண்ட சந்தில் இருந்த ஹாஜி மஷாட்ஜூ "வின் பழைய சாமான்கள் கடைக்கு வந்தார். கடைக்கு முன்புறம் இருந்த விளம்பரப் பலகை "புதையல்கள்" என்று அறிவித்தது.

இன்ன வகையான சாமான்கள்தான் விற்பனை செய்யப்படும் கடை என்றில்லாதபடி துண்டு துக்கடாவாகப் பல வகையான பொருள்கள் ஒழுங்கற்ற முறையில் சிதறிக் கிடந்தன. ஒரு கணம் அவரது கண்கள் கடையைச் சுற்றிலும் ஒரு நோட்டம் விட்டன.

வலது புறத்தில் சாதாரணமான வர்ணக் கற்களின் குவியலுக்கும் கண்ணாடி மணிகளுக்கும் மத்தியில் வெளிர் மஞ்சள் நிறக் கல்லில் செதுக்கப்பட்ட வலது கரமில்லாத ஒரு புத்தர் சிலை இருந்தது. இந்தச் சிலை அவருக்கு மனத் திருப்தி அளிப்பதாக மாக்பெய்ன் உணர்ந்தார்.

சாமான்கள் வாங்குவதில் கைதேர்ந்த அவர், அந்தச் சிலையைக் கவனிக்காதது போல நடித்துக் கடையிலுள்ள இதர பொருட்களைப் பார்வையிடுவது போலக் காட்டிக் கொள்ள ஆரம்பித்தார். மஷாட்ஜூ மரியாதையின் உருவமாக இரு கைகளையும்

கட்டிய வண்ணம் கவனத்துடன் மாக்பெய்னின் கேள்விகளுக்குப் பதிலளித்துக் கொண்டே ஒவ்வொரு பொருளின் வரலாற்றையும் அதன் அருமை பெருமைகளையும் அனுபவித்து விளக்கி, அதோடு அதாக அதனதன் விலையையும் சொல்லிக்கொண்டு வந்தார். மாக்பெய்ன் லேசாக அவரது மனைவியைத் தொட்டு நகரச் சொல்லி விட்டு வேறு சில பொருட்களின் மீது தமது பார்வையைச் செலுத்தினார்.

மாக்பெய்ன் கடையின் மையத்தில் நின்று கொண்டிருந்தார். மங்கலான மின் விளக்கின் வெளிச்சத்தில் கடையிலுள்ள சாமான்கள் மிகப் பழங்காலக் குகையில் கிடக்கும் மிச்ச சொச்சங்கள் போல் காட்சியளித்தன. ஒரு பக்கத்தில் கண்ணாடிக் கதவால் மூடப்பட்ட அலமாரியிருந்தது. அதன் உட்புறம் பரப்பப்பட்டிருந்த பள பளப்பான வெண் பட்டுத் துணியின் மீது கன்னங்கரிய புல்லாங்குழல் ஒன்று வைக்கப்பட்டிருந்தது. அந்தப் புல்லாங்குழலின் மீது மிகச் சன்னமான வெள்ளிக் கம்பிகள் சுற்றப்பட்டிருந்தன. புல்லாங்குழலுக்குப் பக்கத்தில் பழுப்பேறிப் போன பழைய வெள்ளைக் காகிதத்தில், ''இது விற்பனைக்காக அல்ல'' என்று எழுதப்பட்டிருந்தது.

மாக்பெய்ன் மஷாட்ஜூவின் பக்கம் திரும்பி ''இது ஏன் விற்பனைக்கில்லை?'' என்று கேட்டார்.

''ஐயா அதைப் பற்றிக் கேட்காதீர்கள். அதுதான் என் வாழ்வின் செல்வம். காலஞ் சென்ற எனது மகனை நினைவுகூர வைத்துள்ள ஒரே ஞாபகச் சின்னம் அதுதான். தள்ளாத வயதில் என்னைத் தவிக்க வைத்து விட்டு அல்லாவின் பாதங்களில் சேர்ந்து விட்டான்.''

மஷாட்ஜூ அரை குறை ஆங்கிலத்தில்





அவன்: இந்தியா ஒரு ஜனநாயக நாடு என்று ஏன் சொல்றாங்க?

இவன்: அதிக எண்ணிக்கையில் ஜனங்கள் இருப்பதால்தான்!

— கே. ஜி. எஃப். பழனிச்சாமி.

தட்டுத் தடுமாறி இதைச் சொல்லி விட்டுத் தமது தோளில் கிடந்த மஞ்சள் துண்டால் கண்களைத் துடைத்துக் கொண்டார்.

கடையிலுள்ள இதர சாமான்களை ஆராய்ந்து பார்த்துக் கொண்டிருந்த தமது மனைவியைச் சமிக்ஞை செய்து தம்மிடம் வரவழைத்துக் கொண்டார் மாக்பெய்ன்.

''உனது மகனுக்கு என்ன நேர்ந்தது?'' என்று கடைக்காரரிடம் மாக்பெய்ன் கேட்டார்.

''ஒன்றுமில்லை; ஐயா அதைப் பற்றிக் கேட்காமலிருப்பதே நல்லது. எனது இருதயமே வேதனையால் வெடித்து விடும்.''

சிறிது நேரத் தூண்டுதலுக்குப் பிறகு கிழவர் கதையை விவரிக்க ஆரம்பித்தார்.

''நாங்கள் காஷ்மீரைச் சேர்ந்தவர்கள். கடவுளின் அருள் மழை போல அங்கு இடைவிடாது லேசாகப் பனி பெய்து கொண்டே இருக்கும். இது எங்கள் கிராமங்களையும் சொர்க்கத்தையும் இணைக்கும் பாதை போல் இருக்கும். அந்தக் கிராமத்தில் நாங்கள் பல்லாண்டு காலமாக வாழ்ந்து வந்தோம். ரஹீம்ஜா என்ற பெயரில் எனக்கு ஒரு மகன் இருந்தான். நிலவொளி பூமியில் இறங்கிப் பைன்மரங்களின் மீது படிந்து இருக்கும் இரவில் அவன் தனது புல்லாங்குழலை எடுத்துக் கொண்டு காட்டுக்குள் நுழைவான். அங்கு தனது புல்லாங்குழலில் இனிமையான ராகங்களை வாசிப்பான். நீரோடையில் நீந்தி விளையாடும் மீன்கள் குழலோசையைக் கேட்கக் கரைக்கு வந்து தங்களை மறந்து இசையில் மூழ்கி மயங்கிக் கிடக்கும்.

ஒருநாள் இரவு தனது புல்லாங்குழலை எடுத்துக் கொண்டு காடு நோக்கிச் சென்றான். இரவு முழுவதும் கானகத்தில் கான மழை பொழிந்தான். சந்திரன் உறங்கப் போய் விட்டான். ஆனால் வனலோகம் புதிய வாழ்வில் திளைத்து விழித்திருந்தது. ரஹீம்ஜா வீடு திரும்பவே இல்லை.

மறுநாள் பிற்பகல் அவனைத் தேடிக் கொண்டு போனோம். காட்டின் வெகு தொலைவில் வாடிக்கிடந்த பைன் இலைக் குவியலுக்கிடையில் ஓர் இளங் கன்னிப் பெண் இவன் மார்பின் மீது தலை சாய்ந்து இருக்க, இருவரும் தூங்கிக் கிடந்தனர். அவர்களைக் கூப்பிட்டுப் பார்த்தோம். தட்டி எழுப்பினோம். அசையவே இல்லை. உயிர் பிரிந்து விட்டது. இருவரையும் பாம்பு தீண்டி விட்டிருந்தது என்பதைப் பின்னர்தான் தெரிந்து கொண்டோம். உயிர் பிரிந்தும் கூடப் புல்லாங்குழல் அவனது கைப்பிடியில்தானிருந்தது. அதே புல்லாங்குழல்தான் ஐயா இது.

மஷாட்ஜாவின் குரல் கரகரத்து மௌனத்தில் ஆழ்ந்தார். முகத்தை மஞ்சள் நிறத் துண்டால் மறைத்துக் கொண்டு அப்பால் சென்று ஒரு ஸ்டூலில் அமர்ந்தார். கிழவர் துயரக் கதையை முடிக்கு முன்பாகவே மாக்பெய்ன் ஒரு முடிவுக்கு வந்துவிட்டார்—என்னவானாலும் சரி இந்தப் புல்லாங்குழலை வாங்கி விட வேண்டுமென்று. கிழவர் கவனிக்காமலிருக்கும் பொழுதே அமைதியாக அலமாரியின் கதவைத் திறந்து புல்லாங்குழலை வெளியே எடுத்து எதேச்சையாகப் பார்ப்பது போல் அதை ஆராய்ந்து விட்டுப் புத்தம் புதிய நூறு ரூபாய்ச் சலவை நோட்டுக் கட்டு ஒன்றை முன்னாலிருந்த ஸ்டூலில் வைத்து விட்டு, மனைவியுடன் கடையிலிருந்து மாக்பெய்ன் வெளியேறினார்.

ஒருவாரம் சென்று கல்கத்தாவுக்குப் புறப்படுவதற்கு முன்பாக மீண்டும் மாக்பெய்ன் மஷாட்ஜாவின் கடைக்கு விஜயம் செய்தார். என்ன காரணத்தாலோ சென்ற தடவை வாங்க முடியாமற் போன புத்தர் சிலையை வாங்க விரும்பி வந்தார்.

உள்ளே நுழைந்த சமயம் அவரை வரவேற்க, அங்கிருந்த அழகிய வாலிபன் எழுந்தான். புத்தர் சிலையைப் பார்த்தவாறே முன்பு புல்லாங்குழல் இருந்த அலமாரியைத் தாண்டிச் சென்ற போது, அதே அலமாரியில் வேறொரு புல்லாங்குழல் இருக்கக் கண்டு துணுக்குற்று நின்றார். அதன் அருகிலேயே ''இது விற்பனைக்காக அல்ல.'' என்று எழுதப்பட்ட பழுப்படைந்த பழைய வெள்ளைத்தான் கிடந்தது.

திகைப்படைந்த மாக்பெய்ன், ''ஏன் இது விற்பதற்கில்லை'' என்று அந்த வாலிபனைக் கேட்டார்.

''ஹோ ஐயா! அதைக் கேட்காதீர்கள். இதுவே எனது வாழ்வின் பூர்ண சம்பத்து; எனது தகப்பனாரின் நினைவாக.....'' என்று வாலிபன் தொண்டை அடைக்கப் பேச ஆரம்பித்தான்.

கதையை முழுவதும் கேட்க மாக்பெய்னால் கடையில் நிற்க முடியவில்லை.

''என்ன துயரம்! என்ன துயரம்!'' என்று கத்திக் கொண்டே வாசல் பக்கம் பாய்ந்து மாக்பெய்ன் வெளியேறினார்.

ஆங்கில வழி தமிழாக்கம்:

— திருவைகாவூர், கோ. பிச்சை.

# தாத்தா ஏதோ மறுபடியும் குறும்பு செய்யப் போகிறார்!

தாத்தா அருகிலிருந்தால் ஒரு நொடிகூட மந்தமாக இருக்காது. பேரக்குழந்தைகளுக்கு புதுப்புது வேடிக்கைகள் காட்டுவது பற்றியே யோசித்துக் கொண்டிருப்பார். 65 வயதிலும் உலகிலேயே சுறுசுறுப்பான தாத்தா அவர்தான்!

ஹார்லிக்ஸ்தான் அதற்குக் காரணம். இத்தனை வயதிலும் அவர் ஆரோக்கியமாகவும், சுறுசுறுப்பாகவும் இருக்க அது உதவுகிறது.

டாக்டர் சிபாரிசு செய்ததுபோல அது ஊட்டச்சத்து மிகுந்தது; மிக எளிதில் ஜீரணமாவது.

ஹார்லிக்ஸ்— ஒரு நாளைக்கு இரு முறை பருகுவது அவருக்கு விருப்பமான பழக்கமாகிப் போனதில் வியப்பில்லை.



60 ஆண்டுகளுக்கு மேலாக தாத்தாவுக்கு பிரியமான ஆரோக்கிய பானம்.

ஹார்லிக்ஸ் முக்கிய இயற்கை ஊட்டச்சத்துக்கள் நிறைந்தது. சக்தியும், தெம்பும், நல்ல ஆரோக்கியமும் கொடுக்கும் புரதம், வைட்டமின்கள் தாதுப் பொருட்கள், மாவுச்சத்து. ஆகிய சத்துக்கள் எளிதில் ஜீரணமாகும் வகையில் இதில் அடங்கியுள்ளன.

டாக்டர்கள் உலகெங்கும் ஹார்லிக்ஸை சிபாரிசு செய்வதில் வியப்பில்லை. இது குடும்பம் முழுவதற்குமே ஊட்டச்சத்து அளிக்கும் மூலாதாரமான பானம் என்று நிரூபிக்கப்பட்டது.







சிறந்த ஊட்டச்சத்துமிக்க பானம்

HTA-5818 T

# இருள் வரும் நேரம்

**சுஜாதா**

## 15

**எ**ம்.ஏ.டபிள்யூ முப்பத்துநாலு, முப்பத்து அஞ்சு. அந்த வண்டியைத் தர்மராஜனின் ஜீப் தொடர்ந்து வர, அதைப் பற்றி உணர்வில்லாமல் பாபு பாடிக் கொண்டே ஓட்டி வந்தான். பால்குண்டு அவனுக்காகக் காத்திருந்த புல்டெம்பிள் ரோடு பெரிய பிள்ளையார் கோயில் அருகில் கொண்டு நிறுத்தின போது தர்மராஜன் கொஞ்ச தூரத்தில் ஜீப்பை நிறுத்தினார். ''இரு'' என்று கான்ஸ்டபிளிடம் சொல்லி விட்டு ஜீப்பை விட்டு இறங்கி மெல்ல அவர்களை அணுகுவதை இருவரும் கவனிக்கவில்லை. அவர்கள் கவனம் முழுவதும் எதிர்ச் சாரியில் சென்று கொண்டிருந்த பெண்ணிடம்தான் இருக்க, ''ஏய் உடுகி சவாரி வரியா'' என்று அவளருகில் ஆட்டோவை நிறுத்திக் கேட்டான். அந்தப் பெண் பயந்து போய் எதிர்ப்புறமாகக் கடக்க, இருவரும் அவளைத் தொடர்ந்து வர, பால்குண்டு புஜத்தைப் பிடித்து இழுத்தான். தர்மராஜனை அப்போதுதான் கவனித்தார்கள்.

''குரு! போலீஸ்! போலீஸ்!''

பால்குண்டு உடனே பாய்ந்து ஆட்டோவில் ஏறிக் கொள்ள பாபு சரேல் என்று புறப்பட்டு எதிர்த் திசையில் ஓட்டினான். தர்மராஜன் தம் ஜீப்புக்கு ஓடிச் செல்வதற்குள் கவிபுரம் சைடில் நுழைந்து சந்து சந்தாக மாறி மறைந்து போய் விட்டார்கள்.

தர்மராஜன் ''சட்.... ஆளை விட்டுட்டம்பா'' என்று அலுத்துக் கொள்ள, ''எங்க போறாங்க, திரும்ப வண்டி எடுக்க வராமலா போவாங்க? இந்த வண்டியையே திரும்ப ஷெட்டில விட வந்தாகணுமில்லை'' என்றார் கான்ஸ்டபிள்.

''ஆமாம் நேரா ஏஸிடி கராஜுக்குப் போலாம்'' என்றார் தர்மராஜன்.

குறுக்கே பாய்ந்து பணசங்கரி இரண்டாம் பகுதி, ஜெயநகர் எட்டாவது ப்ளாக் என்று வந்த பிற்பாடுதான் பாபு வண்டியை நிறுத்தினான். ''பயந்துகினியா? ஹிஹிஹி!'' என்றான் பால்குண்டு.

''குரு இனிமே வெளிய நடமாடறது நல்லதில்லை. போலீஸ்காரங்க நம்மை வேட்டையாடிக்கிட்டு இருக்காங்க. என்ன செய்யறது குரு? என்னை இந்த வம்பில மாட்டி வுட்டியே....?''

''கவலைப்படாதே பாபு. என் பின்னாலயே வந்துகிட்டு இரு. எந்த போலீஸ்காரனும் உன்னைத் தொட முடியாது.''

''இப்ப என்ன செய்யலாம்?''

''மறுபடி அதே எடத்துக்குப் போறம். அந்தப் பொண்ணை அத்தனை சுலபமா வுட்டுர்றதா?''

''வேண்டாம் குரு! மாட்டிப்பம்.''

''சும்மார்றா அதில் தான்டா த்ரில்லு. நீ புறப்படு புல் டெம்பிள் ரோடுக்கு-அங்கதான் பொண்ணுங்க நடமாட்டம் அதிகம் இருக்கும்.''

''குரு, குரு!''

''அந்தப் பொண்ணைப் பாத்தல்ல?''

''பாத்தேன்.''

''பொண்ணுங்களை என்ன செய்யணும்? சொல்லு?''

''கொல்லணும்!''

''கர்ரெக்ட்! அப்ப வண்டியை எடு.''

ஆட்டோவை மறுபடி சீற்றத்துக்கு உள்ளாக்கித் திருப்பி, ஸௌத் எண்ட் சர்க்கிள் வரை வந்தான். அப்போதே இருட்டியிருந்ததால் நடமாட்டம் குறைந்திருந்தது. ''எல்லாரும் கன்னடா பிச்சர் பாத்துக்கிட்டு இருப்



"அருவிக்குப் போகும் போது அவர் தலையில் நிறைய முடி இருந்தது. மொட்டைத் தலையோடு திரும்பி வர்றாரே?"

"தெரியாமல் டோப்பாவை மாட்டிக் கொண்டு போயிட்டாராம். அருவியோடு போயிடுத்தாம்!"

— எஸ். ஹரிஹரன்.

---

பாங்க. இதான் சமயம்" என்று மெல்ல ஆட்டோவைச் சந்துகளில் ரோந்து போலச் செலுத்தச் சொன்னான் பால்குண்டு. பாபு நகத்தைக் கடித்துக் கொண்டு "எல்லாருமே மோசம் குரு, எல்லாரையும் சேர்ந்தாப்பல ஒழிக்கணுமில்லை" என்றான்.

"கொல்லலாம் கொல்லலாம்; வேளை வரணும். இன்னைக்குக் கொல்ல வேண்டாம். கூட்டிக்கிட்டுப் போயி, மலை உச்சி சொன்னனில்லை. அதில அம்மன் கோவில் வருசம் ஒரு முறைதான் திறப்பாங்க, யாரும் வரமாட்டாங்க."

"ஆட்டோ மலை ஏறுமா?"

"பைப்பாண்டை நிறுத்திரலாம். பாபு, உங்கம்மாவைக் கூட்டிப் போவலாமா?"

பால்குண்டு கண்டபடி சிரித்தான். "ஏண்டா உங்கம்மா இப்படி இருக்கிறா? உனக்குதான் புடிக்காதுன்னு தெரியு மில்லை?"

"பெரிப்பாவை ஒதிகணும் குரு" என்றான் பாபு.

"எவ்வளவு அம்மாங்க நாயமா சம்பாதிச்சு மகனுகளைக் காப்பாத்துவாங்க. இதுக்கு மட்டும் எப்படி தோணிச்சு?"

"சொல்லாத குரு" என்றான். அவன் கண்களில் கண்ணீர் துளித்தது. தொண்டைக் குரல் உடைந்தது.

"நானே பாத்திருக்கேன் பாபு. சலீம்பாய் பட்டரை இல்லை, அதும் பக்கத்தில் சந்து இருக்குதில்லை, அங்கதான் நின்னுகிட்டு இருப்பாங்க. ரெய்டு எப்பன்னு போலீஸ் காரங்களே வந்து சொல்லிடுவாங்க. வெங்கடேஸ்வரா லாட்ஜின்னு போர்டு போட்டிருக்குமில்லை, அங்கதான் ஆஸ்பத்திரி மாதிரி கட்டில் போட்டிருக்கும் பாபு. டேசன்லருந்து நேரா வந்துருவாங்க."

"சொல்லாதே குரு, சொல்லாதே. எங்கம்மா சந்தர்ப்பச் சூழ்நிலையில் அப்படி ஆனாங்க தெரியுமில்லை?"

"இதைப் போய் நம்பறியாடா நாட்டுக் கேஸு!"

"வேண்டாம் குரு! அனாவசியமா எங் கோபத்தைக் கௌறாதே."

"ஒண்ணு செய்யலாண்டா! வாடா சிக்பேட்டை போலாம்!"

"எதுக்கு குரு?" என்றான் பாபு பயத்துடன்.

"வெங்கடேஸ்வரா லாட்ஜில என்ன நடக்குதுன்னு காட்டறேன், வாடா. உங்கம்மா எப்படி சம்பாதிக்கிறா பார்க்கறியா?"

"வேண்டாம் வேண்டாம் நான் வர மாட்டேன்."

"வருவே வருவே."

பாபு அழுது கொண்டே ஆட்டோ ஓட்டினான். அவனுள் இரண்டு பாபு இருந்தார்கள். போகாதே போகாதே என்று ஒரு பாபு போ, போய்ப்பாரு என்று ஒருத்தன்.

**வ**ர்ஷா ராம்பிரகாஷுடன் மெல்ல நடந்து வந்தாள். மஞ்சள் மலர்கள் சாலையில் இறைந்திருந்தன. அவற்றில் ஒன்றை எடுத்து அவர் அவள் கையில் கொடுக்க, அதைத் தலையில் வைத்துக் கொண்டாள். "டபிள் ஹெலிக்ஸ்லதான் நம் பிறவி, சிருஷ்டி, கடவுள், எல்லா உண்மையுமே மறைந்திருக்கிறது" என்றார் அவர்.

"ப்ரொபஸர், இப்ப நீங்க பாசாங்கு பண்றீங்க. டபிள் ஹெலிக்ஸைப் பற்றி இப்ப என்ன பேச்சு?"

"வேற எதாவது சப்ஜெக்டை எடுத்தா உண்மை வெளியே வந்துருமோன்னு பயமா இருக்குது வர்ஷா."

"எதுக்காக உண்மையைப் பத்தி பயப்படணும் நீங்க?"

"குற்ற உணர்வு.. சொன்னனில்லையா?"

"குற்ற உணர்வே வேண்டாம் ப்ரொபஸர். எனக்கு உங்களைப் பிடிச்சிருக்கு, உங்களுக்கு என்னை. இதில மற்ற பேர் யாருமே வரவேண்டியதில்லையே?"

"வாழ்க்கை அத்தனை சுலபமில்லை வர்ஷா. இப்ப எனக்கு என் மனைவியை நார்மலுக்குக் கொண்டு வர வேண்டிய ஆதாரமான கடமை இருக்குது. அதிலிருந்து மீண்டப்புறம்தான் நான் வர்ஷா மாதிரி ஒரு பெண்ணோட பேசவே முடியும்."

"இது வேற."

"வர்ஷா யூ ஆர் வெரி வெரி மிஸ்சிவஸ். என்னை மாதிரி கிழவனை மஸ் பண்றன்னு எண்ணறேன்."

"இல்லை என் ஃபீலிங்ஸ் எல்லாமே ஜெனுவின் ஸார்."

"இப்ப என்ன பண்ணச் சொல்ற என்னை....?"

"நீங்க என்ன செய்ய விரும்பறீங்களோ..."

ராம்பிரகாஷ் கைகடிகாரத்தைப் பார்த்தார். "வா வர்ஷா."

"வரேன்" என்றாள்.

"ஏதாவது ஒரு ஓட்டலுக்குப் போகலாம்."

"சரி!"

"ராத்திரிக்கு..." என்று அவள் முகத்தைப் பார்த்தார்.

"சரி!"



பத்திரிகையாசிரியர்:நீங்கள் சிக்கனத்தைப் பத்தி கட்டுரை எழுத வேண்டியது தான். ஆனால், அதைக் காகிதத்தில் எழுதிக் கொண்டு வராமல் சிலேட்டில் எழுதிக் கொண்டு வந்தால் எப்படி?

— கே. ஜி. எஃப். பழனிச்சாமி.

---

''யூ ஆர் க்ரேஸி'' என்றார். ''விளையாட்டுக்குச் சொன்னா உடனே சம்மதிக்கிறியே, வர்ஷா, உனக்கு வேண்டியது என் அறிவா உடலா?''

''ரெண்டுமே!''

''உனக்கு எப்படி புரிய வைக்கிறதுன்னும் தெரியலை, உன்னை எப்படி புரிஞ்சுக்கறதுன்னும் தெரியலை.''

''அந்த மாதிரி அட்டம்ப்ட் பண்ணவே பண்ணாதிங்க, பி ஸ்பான்டேனியஸ்'' என்றாள்.

மரத்தடியில் இருவரும் உட்கார்ந்தார்கள். இருட்டில் ஒருவர் முகம் ஒருவருக்குத் தெரியவில்லை. ப்ரொபஸரின் முகத்தைத் தன்பால் திருப்பிக் கொண்டாள் வர்ஷா. தன்மேல் பதித்துக் கொண்டாள். கொஞ்சம் நேரம் அப்படியே வைத்திருந்தார். பின்னர் அவள் கழுத்தை, முகவாயை என்று தொட்டுப் பார்த்தார். திமிர் என்று தன்னை விடுவித்துக் கொண்டார். ''மைகாட் நாம் என்ன செய்து கொண்டிருக்கிறோம் வர்ஷா? பேசாமல் எழுந்து வீட்டுக்குப் போ. இது ஆரோக்கியமானதல்ல! இருவருக்கும் கெடுதல்.''

வர்ஷா எழுந்து, ''மறுபடி எப்போது சந்திக்கலாம்?'' என்றாள்.

''இனி சந்திக்க வேண்டாம்.''

''சந்தேகம் கேட்க க்ளாஸுக்கு வரக் கூடாதா?''

''கூடாது!''

''பார்க்கலாம்'' என்று லேசாகச் சிரித்தாள். பஸ் ஸ்டாண்டு வரை அவளுடன் நடந்து வந்தார்.

**வீ**ட்டுக்குப் போன போது, அம்ருதா சன்னலுக்கு வெளியே வெறித்து நோக்கிக் கொண்டிருந்தாள்.

''அம்ரு எப்படி இருக்கே?''

''உங்ககிட்ட என்ன வாசனை?''

''வாசனையா?''

''ஒரு மாதிரி பர்ப்யூம் வாசனை வரலை?'' அம்ரு அவரருகில் வந்து சட்டையை முகர்ந்து பார்த்தாள்.

''ஒண்ணுமில்லை, நீயா இமேஜின் பண்ணிக்காதே!'' அம்ரு நல்லா தூங்கினியா? வரியா வெளியே போய்ச் சாப்பிடலாம்; அப்பா எங்கே?''

''ப்ளைட்ல ஊருக்குப் போயிட்டார். நான் அவர் கூடத் தனியா போக மாட்டேன். நீங்க வந்தால் வரேன்னு சொன்னேன். எனக்கு நீங்கதானே எல்லாம். என்னைத் தனியா விட்டுட்டீங்க. பரவால்லை! ஆனா நான் உங்களை விட மாட்டேனில்லை.''

''அம்ரு நானும் உன்னை விட மாட்டேன்.''

''இந்த பர்ப்யூம் வர்ஷாதானே யூஸ் பண்றா.....?''

''சே! என்ன சொல்ற அம்ரு! நான் உனக்குத் துரோகம் பண்ணுவனா?''

அம்ருதா அவர் தோளில் மாலையாகக் கைபோட்டுக் கொண்டு, ''நேராக் கண்ணைப் பார்த்துப் பேசுங்க'' என்றாள்.

ராம்பிரகாஷுக்கு அவளை நேராகப் பார்க்கப் பிடிக்கவில்லை. முடியவில்லை.

''நான் குறைப்பட்டுட்டேன், கறைபட்டுட்டேன்னுதானே நீங்க எங்கிட்ட வர மாட்டேங்கறீங்க...?''

''என்ன சொல்ற அம்ரு! டோண்ட் பிஹேவ் சில்லி!''

''எனக்குத் தெரியும்.''

''என்ன தெரியும்?''

''என்னை டிவோர்ஸ் பண்ணிட்டு வர்ஷாவைக் கல்யாணம் பண்ணிக்கப் போறீங்க.''

''ரிடிக்யூலஸ்! வர்ஷாவுக்கு என்ன வயசு தெரியுமா? ஷி இஸ் லைக் மை டாட்டர்.''

''டாட்டர்னா ஏன் அப்படி உங்களைப் பார்க்கிறாளாம்?''

''எப்படி யாரு பார்த்தா?''

''எனக்குத் தெரியும்; நீங்க ரெண்டு பேரும் ஒருத்தரை ஒருத்தர் ரகசியமாப் பார்த்துக்கறதைப் பார்த்துட்டேன்!''

''என்ன சொல்ற?''

''மறைக்காதீங்க! எல்லாமே நீங்க ப்ளான் பண்ணிட்டுத்தான் செய்திருக்கீங்க. அந்த ஆட்டோ ரிக்ஷாக்காரங்க கூட உங்க ஆள் தான். அதனாலத்தான் போலீஸ் இன்வெஸ்டிகேஷனே கூடாதுங்கறீங்க. எனக்குத் தெரியாதா? அந்த ராட்சசி வர்ஷாவும் நீங்களும் சேர்ந்து போட்ட ப்ளான் இது! கண்ணைப் பார்த்ததுமே தெரிஞ்சு போச்சு.....''

''அம்ரு யூ ஆர் மேட் மேட்! அவ்வளவு தான் சொல்வேன். பைத்தியம்! பைத்தியம்! உன்னை, உன்னை..... நிம்ஹான்ஸ்லதான் சேர்க்கணும்!''

''அதுக்குத்தானே ப்ளான் பண்றீங்க! எனக்குத் தெரியும். கார்ல எந்த ரிப்பேரும் இல்லைன்னு கராஜ்ல சொன்னானாம். எல்லாமே திட்டம் போட்டுப் பண்ணிட்டீங்க! என்னைப் பைத்தியமா அடிக்க முடியாது தெரியுமில்லை! கஷ்டம்! போலீஸ் இருக்கற வரைக்கும்... ''

''என்ன பண்ற அம்ரு?''

டெலிபோனைச் சுழற்றிக் கொண்டிருந்தாள். ''அலோ டிஎஸ்பி சோமசேகர் இருக்காரா, அவர் கூடப் பேசணும். அம்ருதான்னு சொல்லுங்க. இட்ஸ் அர்ஜண்ட்.''

(தொடரும்)

# ஜெ.கட்சி பிளவுபடக் காரணம் என்ன?

* க. மகேஷ், தியாக துருகம்

**? ஆர். வெங்கடராமனும் ராஜீவ் காந்தியும் ஒரே நேரத்தில் வெளிநாடு சென்றுள்ளார்களே, அது குறித்து தங்களின் கருத்து?**

! அவர்களுக்காக ஒதுக்கப்படும் பல ஏர் இந்தியா விமானங்களினால் ஏர் இந்தியா நிறுவனத்துக்கு ஏற்படும் நஷ்டம் ஒரு புறமிருக்க, உலகில் வேறெந்த நாட்டிலும் இப்படி ஒரே சமயத்தில் முதல், இரண்டாவது தேசத் தலைவர்கள் வெளிநாடு செல்ல மாட்டார்கள். ஒரு சராசரி நிறுவனத்தில் கூட கடைப்பிடிக்கப்படும் முன் ஜாக்கிரதைக்கான நெறிமுறை, நாட்டு நிர்வாகத்தில் காண்பிக்கப்படாதது துரதிர்ஷ்டமே:

* செல்வன் ஜி, திருச்சி.

**? கர்நாடக அரசியலில் ஏன் இத்தனை குழப்பங்கள்?**

! ஜனதா தலைவர்களிடம் உள்ள போட்டி, பொறாமைகளின் விளைவான பகை உணர்வுதான் காரணம். தங்கள் கட்சி முதல்வரையே ஒழுங்காக ஆட்சி செய்ய விடாத ஒரு கட்சியின் தலைமையா பிற கட்சிகளுடன் சேர்ந்து கொண்டு கூட்டணி அமைத்து நாட்டை ஆளப் போகிறது? உருப்பட்டாற் போலத்தான்!

* சுந்தர் சுந்தரி, கோவை.

**? நடிகர் சுனில்தத், எம்.பி.யின் பாத யாத்திரை அவசியம்தானா?**

! ஹிரோஷிமா, நாகசாகியில் அணுகுண்டுகள் போட்டு நாற்பதாண்டுகளுக்கு மேலாகி விட்டது. அவற்றின் பாதிப்பிலிருந்து இன்னமும் மக்கள் விடுபடவில்லை. மருத்துவ சிகிச்சைகள் தொடர்கின்றன. அணு யுத்தம் வராது என்ற உத்தரவாதமும் உலகுக்கு இல்லை. இதை நினைக்கும் போது சுனில்தத்தின் பாதயாத்திரை போன்ற பல பாத யாத்திரைகள் அவசியமே!



* பிளவுக்குக் காரணம்.



* சான்ஸ் கேட்கிறார்!



* காமராஜ் வடிவில்......

* ஒரே சமயத்தில்......



* இந்திரா சடிதங்கள்.





* ......வெளிநாடு......

## நீங்கள் கேட்டவை — தராசு

* பா. க. மணிவண்ணன், திருப்பூர்.

? தமிழ் வளர்க்கும் தலைவர்கள் இப்போது யாராவது இருக்கிறார்களா?

! தமிழை வைத்துத் தங்களை வளர்க்கும் தலைவர்கள் நிறையவே இருக்கிறார்கள்!

* ஆர். தேவேந்திரன், வேலூர்.

? 'தமிழகத்தை ஆள எனக்கொரு சான்ஸ் கொடுக்கக் கூடாதா' என்று சிவாஜி கேட்டிருக்கிறாரே?

! இது என்ன சினிமா சான்ஸா, தயாரிப்பாளர் தூக்கிக் கொடுத்து விட? மக்கள் கொடுக்க வேண்டுமய்யா, வாக்குகளை!

* தே. காயத்ரி நேசன், குடியாத்தம்.

? ஜெயலலிதா கட்சி பிளவுபட முக்கிய காரணம் என்ன?

! 'கட்சிப் பணத்துக்குக் கணக்குக் காட்டவில்லை' என்பது ஒரு காரணம்தான். அதை விட முக்கிய காரணம், 'யார் தலைமை முக்கியம்' என்ற போட்டிதான்! ஜெ. தன் தலைமைப் பதவியை விட்டுக் கொடுப்பதாகச் சொன்னால் கணக்கு செட்டில் ஆகி விடும்!

* கோ. நந்த கோபால், குடியாத்தம்.

? போதைப் பொருள் கடத்தினால் இரண்டு ஆண்டு சிறைத் தண்டனை என்று அவசரச் சட்டம் பிறப்பிக்கப்பட்டுள்ளதே?

! இளைஞர்களின் வாழ்க்கையை சர்வநாசமாக்கும் இவர்களுக்கு இந்தத் தண்டனை போதவே போதாது!

* டி. சீனிவாசன், சென்னை.

? பொற்கோயில் வளாகத்தில் மத்திய அரசு எடுத்துள்ள நடவடிக்கைகள் எந்தப் பலனையாவது அளித்துள்ளதா?

! பயங்கரவாதிகள் பொற்கோயிலுக்குள் பதுங்கிக் கொண்டு அச்சுறுத்தும் நிலைமை மாறியது நிச்சயமான நல்ல பலன்தான்.

* ஏ. கே. பாலசுப்பிரமணியன், செய்துங்க நல்லூர்.

? 'காமராஜரின் வடிவத்தில் மூப்பனாரை மக்கள் பார்க்கிறார்கள்' என்று திண்டிவனம் ராமமூர்த்தி பேசியுள்ளது பற்றி....?

! வடிவத்தில் மட்டும் பார்த்தால் போதுமா? இதயத்தில் அல்லவோ பார்க்க வேண்டும்!

* ஏ. செந்தில் குமார், சூலூர்.

? நேருவுக்கு இந்திரா எழுதிய கடிதங்களைத் தொகுத்துப் புத்தகமாக சோனியா காந்தி வெளியிடப் போகிறாராமே?

! நல்ல காரியம்தான்; ஆனால் புத்தகத்தின் விலை நானூறு ரூபாயாமே! அதுதான் யோசிக்க வைக்கிறது!

* ஆர். கே. லிங்கேசன், பள்ளம்.

? பத்திரிகை சுதந்திரம் விஷயத்தில் ராஜீவ் அரசு எப்படி?

! முழு மார்க் தரலாம் — எக்ஸ்பிரஸ் விவகாரங்களை மட்டும் மறந்து விட முடியுமானால்!

* அ. இராஜப்பன், கருமத்தம்பட்டி.*

? உயிரோடு இருக்கும் போது தியாகிகளைக் கண்டு கொள்ளாத அரசு, மறைந்த பிறகு மலர் வளையம் வைக்கிறதே!

! இருக்கின்ற தியாகிகள் தியாகங்களை நினைவூட்டிக் கொண்டிருப்பார்கள். இன்றைய சுயநல அரசுக்கு அது தொல்லை. அதனால் இறந்து போனதற்கு நன்றி செலுத்துகிறது!

* எஸ். ஏ. மயில்சாமி, கோவை.

? அமரர் கல்கியின் வாழ்நாள் சாதனைகளுள் தலையாய சாதனை என்று எதைக் குறிப்பிடலாம்?

! வாழ்நாள் முழுவதும் பல்வேறு துறைகளில் பல்வேறு சாதனைகளைப் புரிந்த மகத்தான சாதனையைத்தான்!

* ஜெ. ரகுநாதன், புதுக்கோட்டை.

? ஒவ்வொரு வாரமும் கலைஞரை ஏதாவது ஒரு விதத்தில் ஆதரித்துக் கார்ட்டூனோ, கேள்வி பதிலோ வெளியிடுகிறீர்களே, மாமூலை வாரா வாரம் வாங்கிக் கொள்வீர்களா, மொத்தமாகவா?

! இங்கே கமிஷன் விவகாரமே கிடையாது. அதனால் பணி நுணிப்புத் தொகை என்ற மழுப்பல் விவகாரமும் கிடையாது. உங்களவரைப் போல் மாட்டிக் கொண்டு முழிப்பதும் இல்லை.

* ஜெயப் பிரியன், சீர்காழி.

? உங்களை அதிர்ச்சிக்குள்ளாக்கிய சம்பவம் என்ன?

! வேறென்ன, கேரளத்தில் நடந்த ரயில் விபத்துத்தான்! அதைவிடப் பெரிய அதிர்ச்சி, இதுபோன்ற சம்பவங்கள் பல நடந்தும் அவற்றுக்கான விசாரணைக் கமிஷன்கள், அறிக்கைகள் பல சமர்ப்பித்தும் அந்த அறிக்கைகள் அடிப்படையில் ரயில்வே நிர்வாகம் போதிய நடவடிக்கைகள் எடுக்காதது தான்!

* ரூ. 15 பரிசு பெறுபவர்:

அ. இராஜப்பன்,
த/பெ. அம்மாசைக் கவுண்டர்,
கருமத்தம்பட்டி அஞ்சல் — 638 659.
கோவை (மா-வ.)

# அமைதிப் படை திரும்பிச் சென்றால் எங்கள் கதி என்ன...?

— அனைவரும் கேட்கும் கேள்வி!

**'இதோ விடுதலைப் புலிகள் போர் நிறுத்தத்துக்குத் தயாராகி விட்டார்கள்; பேச்சு வார்த்தைகள் நடக்கின்றன' என்பதுபோல் செய்திகள் வந்தன... எல்லாம் ஓர் இக்கட்டில் சிக்கிக் கொண்ட புலிகள் அவகாசம் பெறுவதற்காகச் செய்த தந்திரம் என்பதாகத்தான் எண்ண வேண்டியிருக்கிறது. வழக்கமான கதைதான். மீண்டும் அமைதிப் படையைத் திட்டவும் தாக்கவும் ஆரம்பித்து விட்டார்கள்......**

**இந்தச் சூழ்நிலையில் தற்போது விடுதலைப் புலிகள் இறுதிக் கட்டப் போர் நடத்தும் பட்டிகலோவா வட்டாரத்துக்குச் சமீபத்தில் சென்று வந்த நிருபரின் நேரடி அனுபவங்களைப் பார்ப்போம்.**

விடுதலைப் புலிகளுடன் தொடர்பைத் துண்டித்துக் கொண்ட ஒரு வாலிபன், ஒரு பெண்ணைக் காதலித்துத் திருமணம் செய்து கொண்டான். பெண்ணின் பெற்றோருக்குச் சம்மதமில்லை. சண்டை போட்டு அனுப்பி விட்டார்கள். அந்தப் பெண் அவர்களைச் சமாதானப்படுத்த யார் தயவை நாடினான் தெரியுமா? அமைதிப் படையினரைத்தான்!

அமைதிப்படையினர் விடுதலைப்புலிகளுடன் போராடி ஊரில் அமைதியை நிலைநாட்டுவது மட்டுமல்ல; குடும்பத்திலும் அமைதி நிலவச் செய்ய வேண்டியிருக்கிறது! பல வீடுகளில் உறவினர் — நண்பர்களிடையே தகராறு என்றால் தீர்த்து வைக்க அமைதிப் படையினரைத்தான் நாடுகின்றனர்!

யாழ்ப்பாணத்துக்கு அடுத்தபடியாக இலங்கையின் கிழக்குக் கடற்கரையோரம் உள்ள பட்டிகலோவாதான் ஈழத் தமிழர்களால் மிக முக்கியமான நகரமாகக் கருதப்படுகிறது. யாழ்ப்பாணத்தைப் போலவே இங்கேயும் சுதந்திர ஈழத்துக்கான போராட்டத்தினையொட்டி நிறைய வன்முறைகள் நிகழ்ந்தன. ஆனால் யாழ்ப்பாணம் போல இது விடுதலைப் புலிகளின் ஆதிக்கத்தின் கீழ் முழுமையாக என்றைக்குமே வந்தது கிடையாது. யாழ்ப்பாணத்தில் தமிழர்கள்தான் மிகப் பெரும்பான்மையினர்; பட்டிகலோவா மாவட்டத்திலோ சிங்களவர் நிறைய உண்டு. முஸ்லிம்கள் பல்லாயிரக்கணக்கில் உண்டு. என்றாலும், பெரும்பான்மையினர் இந்து தமிழர்கள்தான். பட்டிகலோவா நகரிலும் தமிழர்களே பெரும்பான்மையினர்.

இந்திய அமைதிப்படை மிகவும் மதிக்கப்படுகிற ஓர் இடம் பட்டிகலோவா. இலங்கையில் வேறு எந்த இடத்திலும் இந்த அளவுக்கு அமைதிப்படை நல்ல பெயர் வாங்கவில்லை. இந்தப் பெருமை முழுக்க முழுக்க இந்திய ராணுவத்தின் ஐம்பத்து ஏழாவது மலைப் படையினரையே சேரவேண்டும். இந்தப் படையில் இந்தியாவின் எல்லா மாநிலங்களையும் சேர்ந்த திறமைசாலிகள் தளபதிகளாகவும் சிப்பாய்களாகவும் இருக்கின்றனர். இவர்கள் விடுதலைப் புலிகளுடன் தீவிரமான ஒரு போராட்டத்தைத் தொடர்வதோடு மக்களின் மனம் கவரும் விதமாகவும் இயங்கி வருகிறார்கள்.

கடந்த அக்டோபர் இறுதியில் யாழ்ப்பாணப் பகுதிகளை இந்திய அமைதிப்படை விடுதலைப் புலிகளிடமிருந்து மீட்டபோது புலிகளில் பலர் வவுனியா, முல்லைத்தீவு மற்றும் பட்டிகலோவாவுக்கு ஓடிவிட்டனர். இவர்களுடைய முகாம்களில் முக்கியமான ஒன்று "பேருட்" என்ற பெயரில் பட்டி

* விடுதலைப் புலிகளின் விசைப் படகில் அதனைக் கைப்பற்றிய அமைதிப் படையினர்.



கலோவா நகருக்கு அருகேதான் அமைந்திருந்தது. சீக்கிரமே இந்தப் பகுதியில் விடுதலைப் புலிகளின் நடவடிக்கைகள் முன்னெப்போதும் காணப்படாத அளவுக்கு வளர்ந்தன.

இவர்களை எதிர்த்து ராணுவ நடவடிக்கையை இந்திய அமைதிப்படை மேற்கொண்ட போதிலும், ஐம்பத்தேழாவது மலைப்படை, பிப்ரவரி 22 — ஆம் தேதிதான் வந்து சேர்ந்தது. இவர்கள் ஏற்கெனவே இந்தியாவின் வடகிழக்குப் பகுதியில் ஊடுருவல் களையும் புரட்சிகளையும் முறியடித்துப் பழக்கப்பட்டவர்கள்.

இவர்கள் வந்து சேர்ந்தவுடனே விடுதலைப் புலிகளின் முகாம்கள் எங்கெங்கே, எந்த அளவில் உள்ளன; அவற்றின் ஆள் பலம், ஆயுத பலம் என்ன என்று கணித்தார்கள். சில நாட்களுக்குப் பிறகு கைதான விடுதலைப் புலிகளே இவர்கள் தயாரித்த வரைபடங்களையும் அட்டவணைகளையும் பார்த்துவிட்டு ஆச்சர்யப்பட்டுப் போனார்கள். எதிரியைப் பற்றி இத்தனை விஷயங்களை இத்தனை குறுகிய கால அளவில் எப்படி இவர்களால் தெரிந்து கொள்ள முடிந்தது என்று அந்தக் கைதிகள் வியந்து பேசிய போது நான் அருகில் இருந்தேன்.

இந்த விவரம் சேகரித்தலுக்குப் பிறகு, நன்றாகத் திட்டமிட்டு இயங்கியதில் பட்டிகலோவா வட்டாரத்தில் விடுதலைப் புலிகளை அமைதிப்படை எளிதில் வெற்றி காண முடிந்தது. விடுதலைப் புலிகளின் வட்டாரத் தளபதிகள் பலர் கைதாயினர். சாமானிய மக்களுக்கும், அவர்களின் உடைமைகளுக்கும், ஊருக்கும் அற்பசொற்ப சேதம்தான் ஏற்பட்டது.

''விடுதலைப்புலிகளின் முதுகு முறிந்து போனது; பெரும்பாலான தளபதிகள் வளைத்துப்பிடிக்கப்பட்டுவிட்டனர்'' என்று விடுதலைப் புலிகளிடம் அனுதாபம் உள்ள புனிதத் தந்தை ஃபெர்னாண்டோ கூறினார்.

அமைதிப்படையானது, மனம் மாறும் விடுதலைப் புலிகளுக்கு நல்வாழ்வு அளிப்பதாக ஆசையும் காட்டுகிறது; மிரட்டவும் செய்கிறது! விடுதலைப் புலிகளின் முகாம்களைக் கைப்பற்றுவதுடன் நில்லாது, அவற்றை அழித்தும் விடுகிறது. தகவல் தொடர்பு, நிர்வாக யந்திரம், துப்பறியும் சாதனங்கள், ஆயுதங்கள் எல்லாம் கைப்பற்றப்பட்டு அழிக்கப்படுகின்றன. ஒரு நாளைக்குத் தொண்ணூறு ரேடியோ செய்திகளை அனுப்பிய விடுதலைப் புலிகள் இன்று ஐந்தாறு செய்திகளைக்கூட அனுப்ப முடியவில்லை! கைப்பற்றப்பட்ட முகாம்கள், தண்ணியில்லாக் காட்டில், மின் வசதி கூட இல்லாத இடங்களில் இருந்தாலும் அமைதிப் படை அவ்விடம் விட்டு அசைவதில்லை. விடுதலைப்புலிகள் திரும்பி வர இடமளிப்பதில்லை.

பட்டிகலோவாவில் நான் சந்தித்த மக்கள் பலரும் அமைதிப்படை வீரர்கள் நல்லபடியாக நடந்து கொள்வதாகக் கூறினார்கள். ஒரு சில நிகழ்ச்சிகளில் இந்திய அமைதிப் படை வீரர்களால் பாதிக்கப்பட்ட மக்கள் கூடப் பொதுவாக நோக்குமிடத்தில் அவர்களுக்கு நற்சான்றிதழ் வழங்கவே தயாராயிருக்கிறார்கள். இதற்கு முக்கிய காரணம், ஓரிரு தடவைகளில் அமைதிப் படையினர் அத்து மீறி நடந்து கொண்டிருந்தால், அப்படி புகார் வந்தவுடனே, அந்த நபர்கள் மீது விசாரணை நடந்து, அவர்கள் தண்டிக்கப்படுவதுதான்.

இதற்குப் பல சம்பவங்களும் நிகழ்ச்சிகளும் சான்றுகளாகத் தரப்படுகின்றன. மக்கள் இந்தக் ''கதைகளை'' உற்சாகத்துடன் கூறுகிறார்கள்.

ஒரு குண்டு வெடித்து பட்டிகலோவா மார்க்கெட்டில் ஓர் இரண்டு மாடிக் கட்டடம் தகர்ந்து, பன்னிரண்டு பேருக்குக் காயமும் ஒரு பெண்ணின் மரணமும் நேர்ந்த போது, ஸ்ரீலங்கா துருப்பினர் பதற்றமடைந்தனர். தாறுமாறாகச் சுடவும் ஆரம்பித்தனர். இந்திய அமைதிப்படையின் ஒரு மேஜர், அவர்களைத் தடுத்து நிறுத்தி, எச்சரித்தார். அமைதிப்படையின் தரப்பில் ஒரு தோட்டா கூடச் சுடப்படவில்லை. மாறாகக் காயமுற்றவர்களுக்கு முதலுதவி தந்து, மருத்துவமனைக்குக் கொண்டு போவதில் கவனம் செலுத்தினார்கள். இதற்காக பட்டிகலோவா நகர மக்கள் கமிட்டி, அமைதிப் படையினரின் நடத்தையைப் போற்றியும் வாழ்த்தியும் மேஜர் ஜெனரல் சிங்குக்கு ஒரு கடிதம் எழுதி அனுப்பியுள்ளது.

இந்திய ராணுவ வீரர்கள் வியர்வை சிந்தி சாலைகள் அமைப்பதையும் புதிய டெலிஃபோன் தொடர்புகளை உருவாக்குவதையும் பட்டிகலோவாவில் நான் பார்த்தேன். காத்தான்குடி முஸ்லிம்கள் டெலிஃபோன் தொடர்பு மீண்டும் கிடைத்ததற்காக நன்றி கூறி மேஜர் ஜே. எஸ். ஸோதிக்குக் கடிதம் எழுதியுள்ளனர்.

வட்டார மக்களுடன் ஒன்றுவதற்கு

அமைதிப்படை பெரு முயற்சி எடுக்கிறது. இதற்காக, விளையாட்டுப் போட்டிகள், கலை நிகழ்ச்சிகள் முதலியன நடத்தப்படுகின்றன. கால்வாய்கள் மீது இரு பாலங்களை மட்டுமின்றி, விவசாயிகளுக்கு உதவ ஓர் அணையைக் கூட அமைதிப்படை கட்டித் தந்துள்ளது! பள்ளிகளில் புத்தகங்கள் இல்லையென்றால் சென்னையிலிருந்து கூட வரவழைத்துத் தரப்படுகிறது!

நமது ராணுவத்தின் இன்ஜினியர்கள் பட்டிகலோவாவின் விமான நிலையத்தில் புதிய ரன்—வே அமைத்து, சிறு விமானங்கள் வந்திறங்க வழி வகுத்திருப்பது மட்டுமின்றி, கோயில்களைப் பழுது பார்க்கவும் செய்கின்றனர்!

பட்டிகலோவா விவசாயிகள் தங்களுக்கு ரேஷனில் வழங்கப்படும் டீசல் எண்ணெய் போதவில்லை என்று புகார் செய்த போது கொழும்பு ஒரு முடிவெடுக்கத் தயங்கியது. அமைதிப்படையோ, தனது தேவையைக் குறைத்துக் கொண்டு அந்த அளவுக்கு விவசாயிகளின் தேவையைப் பூர்த்தி செய்தது.

**அ**மைதிப்படையினரின் தாராள மனப்பான்மை விடுதலைப் புலிகள் பக்கமும் நீள்கிறது என்பதுதான் விசேஷம்! சிறையில் விடுதலைப் புலிகள் வி.ஐ.பி.க்கள் போல நடத்தப்படுகின்றனர். நாளிதழ்கள், சஞ்சிகைகள், ரேடியோ, டீவி, சீட்டுக்கட்டு போன்ற இதர விளையாட்டு சாதனங்கள் முதலியனவெல்லாம் தரப்படுகின்றன. உறவினரை அவர்கள் வாரம் ஒரு தடவை பார்க்கலாம். வீடியோவில் வாரம் இரண்டு தமிழ் சினிமாக்களைக் காணலாம்!

பட்டிகலோவா மாவட்டத்தில் இலவசமாக ஐந்நூறு நோயாளிகளுக்கு அமைதிப்படையும் செஞ்சிலுவைச் சங்கமும் இணைந்து சிகிச்சை செய்கின்றன.

இதையெல்லாம் பார்க்கும் போது, அமைதிப்படை இந்தியா திரும்புவது என்பதுதான் பெரிய பிரச்னையாக இருக்கும் போலிருக்கிறது. ''அமைதிப்படை திரும்பிப் போய் விட்டால் எங்கள் கதி என்ன?'' என்று கேட்காதவர் அநேகமாக இல்லவே இல்லை! ஒரு வேடிக்கை என்னவென்றால் விடுதலைப் புலிகளின் ஆதரவாளர்கள், எதிரிகள், ஸ்ரீலங்கா வீரர்கள், பொது மக்கள் முதலிய அனைத்துத் தரப்பினருமே வெவ்வேறு காரணங்களுக்காக இந்தக் கேள்வியை எழுப்புவதுதான்!

அமைதிப்படை அதிகாரிகளோ, ''எங்களால் முடிந்ததையெல்லாம் இங்கே அரசுக்கும் ஈழத் தமிழ் மக்களுக்கும் நாங்கள் செய்தாயிற்று; இனி, அரசாங்கங்கள்தான் பேச்சு வார்த்தைகள் நடத்தி நல்ல அரசியல் தீர்வு காண வேண்டும்'' என்கின்றனர்.

கட்டுரை, புகைப்படம்:

**எம். ஆர். நாராயண் சுவாமி.**

# நெப்போலியனுக்கு வந்த நோய் நமக்கும் வருகிறது!

நல்ல ஆரோக்கியத்துடன் திடகாத்திரமாய் இருக்கும் இளைஞர்களுக்குத் திடீரென்று வயிற்று வலி, வயிற்றுப் போக்கு போன்றவை ஏற்பட்டு, கை வைத்தியத்தினால் குணமாகாமல், ஆரோக்கியத்தை அடியோடு குலைத்துவிடுகிறது. இதற்குக் காரணம்...? ''மாவீரன் அலெக்சாண்டருக்கு வந்ததே, அதே நோயாக இருக்கலாம்!'' என்கிறார் சென்னை, இராயப்பேட்டை மருத்துவமனையில் பணிபுரியும் டாக்டர் எஸ். சுபாஷ்.

நிருபர்: டாக்டர்! அமீபியாஸிஸ் என்றால் என்ன?

டாக்டர்: 'எண்டமீபா இஸ்டோ லிட்டிகா' என்று ஒரு கிருமி. இதனால் ஏற்படும் எல்லா இன்னல்களுக்கும் பொதுவாக அமீபியாஸிஸ் என்கிறார்கள். உலக சுகாதார நிறுவனத்தின் கூற்றுப்படி, இந்நோயின் அடையாளங்கள் ஒருவரிடத்தில் வெளிப்படையாகத் தென்படாவிட்டாலும், அவர் உடலில் எண்டமீபா இஸ்டோ லிட்டிகா கிருமி வரப் பெற்றால் அவர் அமீபியாஸிஸ் நோயாளியே ஆவார். இந்த அடிப்படையில் நோக்கினால் உலக மக்கள் தொகையில் பத்து முதல் பதினைந்து சதவீதம் பேர் இந்த நோயால் பாதிக்கப்பட்டவர்கள் என்கிறது. உலக சுகாதார நிறுவனத்தின் புள்ளி விவரம்.

நிருபர்: இது அண்மைக் காலத்தில் தோன்றிய வியாதியா?

டாக்டர்: இல்லை. இந்த வியாதி மிகப் பழைமையானது. இந்த நோய் பற்றிய குறிப்புகள் கி. மு. 800—லேயே காணப்படுகின்றன. இந்த அமீபியாஸிஸ், சாமானியர்களை மட்டும் பீடித்திருக்கவில்லை. அலெக்ஸாண்டரின் மரணத்துக்குக் காரணம் அமீபியாஸிஸ்தான். அமீபியாஸிஸ் தாக்குதலுக்குட்பட்ட, நெப்போலியன், கல்லீரலில் கட்டி வந்து, அந்தக் கட்டி வயிற்றுக்குள்ளேயே உடைந்து, ரத்தப் போக்கு உண்டாகி இறந்ததாய்ச் சொல்லப்படுகிறது. நெப்போலியன் தங்கியிருந்த 'ஹெலினா' தீவுவாசிகளில் பலர் ரத்த வயிற்றுப் போக்கு வியாதியினால் பாதிக்கப்பட்டிருந்தார்களாம். இது அமீபியாஸிஸ் நோயின் இன்னோர் அடையாளம். மதுப் பழக்கத்துக்கு அடிமையான காரணத்தால், நெப்போலியனுக்கு இருந்த அமீபியாஸிஸ் மிகக் கடுமையாயிற்று..

பல நூற்றாண்டுகளாய் இந்த நோய் இருந்து வந்தாலும், எண்டமீபா இஸ்டோ லிட்டிகா கிருமி கண்டுபிடிக்கப்பட்டது. 1859—ம் ஆண்டுதான். ஆனாலும், இந்தக் கிருமியின் மூலம் ஏற்படும் தொல்லையின் முழுப் பரிமாணத்தையும் கண்டுபிடித்தவர் லாஷ் என்ற ரஷிய மருத்துவர். ஆண்டு—1975.

நிருபர்: அந்தக் கிருமியைப் பற்றி விவரமாய்ச் சொல்லுங்களேன் டாக்டர்!

* டிரோபோசைட் வடிவில் கிருமி.



* சிஸ்ட் வடிவில் கிருமி.





* டாக்டர் சுபாஷ்.

டாக்டர்: சந்தர்ப்பத்துக்கேற்ப, வெவ் வேறு வடிவங்களை ஏற்கும் திறனுடையது இந்தக் கிருமி. பொதுவாய்ப் பெருங்குடல் பகுதியில் இது வசிக்கும். உணவு அல்லது தண்ணீர் மூலம் வாய் வழியே, உள்ளே போகும் கிருமி, 'சிஸ்ட்' வடிவில் இருக்கும். சிஸ்ட் வடிவிலிருக்கும் போது, இதை எளிதில் அழித்து விட முடியாது. குடலினுள் சென்று, 'டிரோபோஸைட்' உருவத்துக்கு மாறி, நோய்களை உருவாக்கும். வயிற்றில் சதைகளைப் புண்படுத்தி, தொல்லைகள் தரும். உடலின் இயல்பான நோய் எதிர்ப்புத் திறன் அதிகமாய் உள்ள போது, இக் கிருமி, டிரோபோஸைட் உருவத்திலிருந்து, அழிக்க முடியாத 'சிஸ்ட்' உருவத்துக்கு மறுபடி மாறி விடும். இந்த மாற்றத்தின் மூலமாக, கிருமி தன் வர்க்கத்தினை அழிவிலிருந்து பாதுகாத் துக் கொள்வது மட்டுமின்றி, நோய்களைப் பரப்பவும் செய்கிறது. இதனால் இந்த நோயை அடியோடு போக்குவதோ குணப் படுத்துவதோ, மீண்டும் வராமல் காப்பதோ கடினம்.

நிருபர்: அமீபியாஸிஸ் கிருமியினால் என்னென்ன தொல்லைகள் வரக் கூடும்?

டாக்டர்: குடல் சம்பந்தமான உபாதை கள்தான் அதிகமாய் வரும். இதனால் வரும் வயிற்றுப் போக்கிற்கு 'அமீபிக் டிசண்டரி' என்று பெயர். இதில் வயிற்றுவலி, வயிற்றுப் போக்கு, சீத பேதி, சோர்வு, பலவீனம் எல்லாமே வரலாம். வியாதி தீவிரமானால் ரத்தமும், சீழும் கலந்த மலம் வரும். மதுப் பழக்க முள்ளவர்களுக்கு, நோயின் தீவி ரம் சற்று அதிகமாகவே இருக்கும். மலப் பரிசோதனை மூலம், அமீபியாஸிஸை எளிதில் கண்டறிந்து விடலாம். ஆனாலும் ஒன்றை நினைவில் கொள்ள வேண்டும். மலத்தில் ரத்தம் வந்தால் உடனே அது அமீபியாஸிஸ்தான் என அவசரப்பட்டு முடிவு எடுத்து விடக் கூடாது. ரத்த வயிற்றுப் போக்கு, வேறு சில வியாதிகளுக்கும் தோன் றும் அறிகுறி.

அமீபியாஸிஸ் நோய் முற்றி தாக்கப்படும் இன்னொரு உறுப்பு கல்லீரல். ஈரலில் கட்டி யும், வீக்கமும் ஏற்பட்டு, இதன் வெளிப் படை விளைவுகளாய் ஜுரம், வயிற்றுவலி, பசிக் குறைவு, சோர்வு, குமட்டல் இவையும் வரலாம். அல்ட்ரா சவுண்டு பரிசோதனை மூலம் ஈரலில் உள்ள கட்டி மற்றும் வீக்கத் தைக் கண்டுபிடித்துச் சிகிச்சையளிக்க முடி யும். அப்படி சிகிச்சையளிக்கா விட்டால், கட்டி முற்றி, உடைந்து, விபரீதமான விளை வுகளை ஏற்படுத்தக் கூடும்.

நிருபர்: அமீபியாஸிஸ் நோய் வராமல் தடுக்க என்ன செய்ய வேண்டும்?

டாக்டர்: குடிநீரைக் கொதிக்க வைத்துப் பயன்படுத்துவது, காய்கறிகள் போன்ற வற்றைச் சுத்தம் செய்தபின் உபயோகிப் பது, சமைக்கும் போதும் சாப்பிடும் போதும் கைகளைச் சுத்தமாகக் கழுவிக் கொள்வது, ஈ, கரப்பான் பூச்சிகளை ஒழித்து விடுவது; சுற்றுப்புற சுகாதாரம் பேணுவது — இவை மூலம் அமீபியாஸிஸைத் தவிர்க்கலாம். பெரும்பாலும் மழை நாட்களில் கழிவுநீர் குடிநீருடன் கலப்பதால் அமீபியாஸிஸ் ஏற்பட வாய்ப்புகள் அதிகம். தண்ணீர்ப் பற்றாக்குறையால் ஏற்படும் சுகாதாரக் கேடும் இந்த நோய் தோன்ற காரணமாக லாம். இக் காரணங்களை நீக்கினால் நோயைத் தடுக்க வாய்ப்புண்டு.

— பேட்டி: எஸ். சந்திரமௌலி.



அடுத்த இதழில்...

-கவர் ஸ்டோரி

யேசுதாஸ் பதில்கள்



# அவளுக்குப் புரிந்துவிட்டது...

படித்துக் கொண்டிருந்த வாரப் பத்திரிகையைச் சோர்வோடு மூடினாள் ராதிகா. சே! வெறும் அபத்தம். இப்படியெல்லாம் கூட நடக்குமா என்ன? கற்பனைக்கும் ஓர் அளவு வேண்டாம்?

''என்ன உனக்குள் நீயே முணுமுணுக்கற?'' லேசாகப் புரண்டு அருகில் படுத்திருந்த மனைவியைக் கேட்டான் சதீஷ்.

அது ஒரு ஞாயிறு மதியம்.

''ஒன்றுமில்லை.... இந்தக் கதையில்...''

—சொல்ல வந்ததைப் பாதியில் நிறுத்தி விட்டாள் ராதிகா. சொன்னாலும் பலனிருக்காது. சதீஷ் தமிழ்ப் பத்திரிகைகள் படிக்க மாட்டான். அவன் படிக்கும் இங்கிலீஷ் புத்தகங்களை அவள் மரியாதையோடு எடுத்து அடுக்கி வைப்பாள். அதோடு சரி. அதைப் பற்றி அவளுக்கு வேறு ஒன்றும் அபிப்பிராயம் கிடையாது.

அதுவுமில்லாமல் தான் படித்த அந்தக் கதையை அவனிடம் சொல்ல வேண்டிய அவசியம்தான் என்ன? எல்லாம் வெறும் பேத்தல்.

யாரோ டாக்டராம். அதுவும் கண் டாக்டராம். தன்னிடம் வரும் பேஷண்டிற்குப் பார்வை தருவதற்காக அந்தப் பேஷண்டின் மனைவியின் கற்பையே விலையாகக் கேட்கிறானாம். இப்படிக் கூட இருப்பார்களா என்ன மனிதர்கள்?

அவள் சிந்தித்துப் பழக்கமில்லாதவள். அதோடு நிறுத்திக் கொண்டாள்.

ராதிகாவைப் பொருத்தவரை அவள் கணவன் சதீஷ் மிகவும் உயர்ந்தவன். தங்கம், வைரம். அதற்குமேல் ஏதாவது இருக்குமானால் அந்தப் பொருளுக்கும் தகுதியானவன்.

ராதிகாவைப் பற்றிச் சொல்ல வேண்டுமானால் —

மென்மையானவள். ஆனால், படித்தவளோ, வசதியானவளோ அல்ல. திருமணமாகி இரண்டு வருட காலத்தில் சதீஷ்தான் தனக்கு எல்லாம் என்று ஆனவள்.

மதியம் ஒரு குட்டித் தூக்கத்தின் பின் காப்பி சாப்பிடும் சமயம்தான் சதீஷ் அந்த விஷயத்தை அவளிடம் சொன்னான்.

''ராதி! நேற்று ஆபீஸுக்குப் போன் வந்தது. உன் தம்பிதான் பேசினான். கல்யாணத்துக்கு எப்ப வரோம்னு கேட்டான். செவ்வாய்க் கிழமைக்கு டிக்கெட் வாங்கியிருப்பதைச் சொன்னேன். உன்னை ரொம்பக் கேட்டதாகச் சொன்னான்.''

ராதிகாவுக்கு மகிழ்ச்சி பிடிபடவில்லை.

''குமார் பேசினானா? எப்படிப் பேசினான்? ரொம்பச் சந்தோஷமாகப் பேசினானா? இல்லை வெட்கப்பட்டுக் கொண்டே பேசினானா?''

''எல்லாம் சாதாரணமாகத்தான் பேசினான். அதுதான் ஊருக்குப் போகிறோமே! பார்த்துக் கொண்டால் போகிறது. அதுவரை தாங்குமில்லையா?''

கிண்டலாகப் பேசி மனைவியை இறுக்கமாக அணைத்து விடுவித்தான். இப்படித்தான் வீட்டில் இருக்கும்போதெல்லாம் நிமிஷத்திற்கு ஒரு இறுக்குப்பிடி பிடிப்பான். ராதிகாவுக்கு ஒரு நிமிடம் மூச்சு முட்டினாலும் மறுப்பு சொல்ல மாட்டாள். ஆனால் இப்போது மறுக்க வேண்டும் போல இருந்தது. ஆனாலும் பேசாமல் இருந்துவிட்டாள்.

அவள் மனத்தளவில் தன் பிறந்த வீட்டிற்குச் சென்று விட்டவள் போல் காணப்பட்டாள். அம்மா, அப்பா, அண்ணா, முக்கியமாகத் தம்பி குமார்.

குமாருக்குக் கல்யாணம்! ஆகா! எவ்வளவு மகிழ்ச்சியான செய்தி. தம்பியும் அவளும் அடிக்காத லூட்டியா? போடாத சண்டையா? ஆனாலும் திருமணமாகி வந்த பின்புதான் அவளுக்குத் தன் மேலேயே ரொம்பவும் கோபம் வந்தது. சீ! ஏன் தான் தம்பியுடன் அப்படிச் சண்டை போட்டோமோ என்று வருத்தப்படுவாள். தான் ஏதோ பெரிய மனுஷி போலவும், இருபத்திநாலு வயசு குமார் ரொம்பவும் பச்சைக் குழந்தை போலவும் எண்ணிக் கொள்வாள்.

இரவு உணவைச் சமைத்தாள். எல்லாம் அனிச்சையாக ரெடியாகி, சாப்பாட்டு மேஜைக்கு வந்தது அவளுக்கே ஆச்சர்யமாக இருந்தது— எப்படி அவ்வளவு சீக்கிரம் செய்ய முடிந்தது என்று.

இரவு படுத்துக் கொண்ட பின்னும் அவள் அதே மன ஓட்டத்திலேயே பயணம் செய்து கொண்டிருந்தாள். ஊருக்குப் போய் ஒரு வருடம் ஆகிவிட்டது ஒரு காரணம். இருமணப் பத்திரிகை வந்தபோது இருந்ததைவிட, நாளன்றைக்குக் கிளம்பப் போகிறோம் என்ற எண்ணம் அவளை அதிகமாகப் பாதித்து விட்டது. அந்த மகிழ்ச்சியான பாதிப்பில் அவள் சதீஷை முதல் முறையாகப் புறக்கணித்தாள். அந்த டபுள்காட் மெத்தையில், அவன் அணைப்பை மறுத்து ஓர் ஓரத்துக்கு ஒதுங்கினாள்.

''ஏன்? என்னாச்சு?''

''ஒன்றுமில்லை.''

ராஜி ரகுநாதன்

''அதுதான் ஏன் என்று கேட்கிறேன்?''

''என்னவோ ஊரைப் பற்றியே நினைவாக இருக்கிறது. வேறொன்றுமில்லை.''

''அந்தக் கதையெல்லாம் வேண்டாம். ஏன் வேண்டாமென்று கேட்கிறேன்?''

''அதுதான் சொன்னேனே, வேண்டும் போல் இல்லை என்று.''

''அதுதான் ஏனென்று கேட்கிறேன்?''

''இதற்கெல்லாம் காரணம் இருக்குமா என்ன?''

''அது எனக்கு அனாவசியம். செவ்வாய்க்கிறான். இல்லை. இல்லை. பிளாக்மெயில் செய்கிறான். ஏதோ ஒன்று. ஆனால் சதீஷ் இப்படியெல்லாம் பேசி அவள் பார்த்ததில்லை. இந்த வாக்குவாதத்திற்கு முன் வரை அவன் பெரிய உத்தமனாக, மனைவியைத் தாங்கும் கணவனாகக் காட்சியளித்தான். ஆனால் இப்போது ஏன் இப்படி?

ராதிகாவுக்குள் முதன் முறையாக லேசாக ஒரு வெறுப்பு எழுந்தது. தன்மானம் முழிப்புக் கொடுத்தது.

தலையணையை எடுத்துக் கீழே போட்



கிழமை கிளம்ப வேண்டும். அதைப் புரிந்து கொள்!''

ராதிகாவுக்கு நிஜமாகவே புரியவில்லை. இருவரும் கட்டிலின் இரண்டு கோடிகளில் இருந்தார்கள்.

''இதில் புரிந்து கொள்ள என்ன இருக்கிறது? நாம்தான் போகிறோமே!''

''நீ இப்படி என் கையைத் தள்ளி விட்டால் நான் வருவது நிச்சயமில்லை.''

என்ன சொல்கிறான்? ராதிகாவுக்கு இப்போது லேசாகப் புரிந்தது. லஞ்சம் கேட்டுக் கொண்டு தரையில் படுத்தாள்.

திரும்பிப் பார்த்த சதீஷ் 'உம்' என்ற சத்தத்தோடு கட்டிலின் நடுவில் நன்றாகக் காலை நீட்டிப் படுத்துக் கொண்டான். மீண்டும் நகர்ந்து வந்து கட்டிலின் விளிம்பிலிருந்து தலையை நீட்டி சொன்னான்.

''**கணவனுக்கு மனைவி எந்த நேரமும் உடன்பட வேண்டும் என்று தெரிந்து கொள்.**''

**மறுநாள்.**



## அருள்வாக்கு

வாழ்க்கைத் தொல்லைகளிடையே கொஞ்சம் உல்லாசமாகப் பொழுது போக்குவது ஒரு தப்பா என்று கேட்பீர்கள். உங்களுக்குச் சொல்கிறேன். பரோபகாரமாகச் சேவை செய்தால் அதுவே பெரிய உல்லாசம் என்று தெரியும். அதுவே விளையாட்டு. அதுவே இன்பம்.

கிருஷ்ண பரமாத்மா இப்படித்தான் வெளியிலே விளையாடுவதாகத் தெரிந்தாலும், உள்ளே அத்தனையும் பரோபகார சேவைதான் செய்தான். எத்தனை பேருடைய எத்தனை எத்தனை கஷ்டங்களை விளையாட்டாகவே போக்கடித்தான்? குன்றைத் தூக்கிப் பிடித்தது விளையாட்டு மாதிரி இருக்கும். ஆனால் கோபர்களைக் காப்பதற்கே அவ்வளவு பெரிய மலையை பாலகிருஷ்ணன் தூக்கினான். சின்னக் குழந்தை விஷம் கக்கும் காளிங்கனின் படத்திலே நர்த்தனம் செய்தது வெளியிலே பார்த்தால் விளையாட்டு; உண்மையில் அதுவும் ஜனங்களைக் காத்து அவர்களுக்கு நீர்நிலையை மீட்டுத் தருவதற்காகச் செய்த சேவைதான். இப்படித்தான் எத்தனையோ விளையாட்டுக்கள் செய்தான். அத்தனையும் சேவை. எவனைப்போல் விளையாடினவன் இல்லையோ, அவனைப் போல் சேவை செய்தவனும் இல்லை என்று கிருஷ்ண பரமாத்மாவின் உதாரணத்தில் பார்க்கிறோம். லௌகிக சேவை மட்டும் இல்லை. ஞான சேவையும் நிறையச் செய்தான். அர்ஜுனன், உத்தவர் போன்றவர்களுக்கு மகா உபதேசங்கள் செய்தான். சேவை, ஞானம், விளையாட்டு எல்லாம் அவனிடம் ஒன்றாக இருந்தன. துளிக் கூடப் பற்றுதல் இன்றியே இத்தனையும் செய்தான். சிரித்துக் கொண்டே சாந்தமாக இவ்வளவையும் செய்தான். அதனாலேயே அநாயாசமாகச் செய்ய முடிந்தது. நம்மிலும் சேவை செய்கிறவர்களுக்கெல்லாம் இந்தச் சிரிப்பும் சாந்தமும் எப்போதும் இருக்க வேண்டும் — தைரியம், ஊக்கம் இவற்றோடு.

— ஜகத்குரு காஞ்சி காமகோடி ஸ்ரீ சந்திரசேகரேந்திர சரஸ்வதி சங்கராச்சாரிய சுவாமிகள்.

மாலையில் வீடு திரும்பிய கணவனைப் பார்த்து அதிர்ந்தாள் ராதிகா.

சதீஷ் கையில் சிகரெட்.

இது என்ன புதுப் பழக்கம்?

"என்ன நீங்க? சிகரெட்டெல்லாம் பிடிச்சுக்கிட்டு?"

அருகில் போய்ப் பிடுங்கப் போனவளைப் பிடித்துத் தள்ளினான்.

"உன் வேலையைப் பார்த்துக்கிட்டுப் போ!"

ராதிகாவுக்கு அழுகை வந்தது.

அவள் அடுக்கி வைத்திருந்த சூட்கேஸிலிருந்து அலட்சியமாகத் தன் துணிமணிகளை எடுத்துத் திரும்ப பீரோவில் வைத்தாள்.

பார்த்துக் கொண்டே இருந்த ராதிகாவுக்கு ஏதோ ஒரு விஷயம் புரிகிறாற் போலிருந்தது. திடீரென்று தான் முதல் நாள் படித்த கதை ஞாபகம் வந்தது. கதைகள் எல்லாம் அபத்தம் இல்லை. அனுபவங்கள் தான் போலும் என்று நினைத்துக் கொண்டாள்.

நாளை அம்மாவிடம் போய்த் தான் செய்ததையும், சதீஷ் செய்ததையும் சொன்னால் அம்மா யார் பக்கம் நியாயம் பேசுவாள்? நிச்சயம் தன் சார்பில் பேச மாட்டாள். 'தங்கமான மாப்பிள்ளையை உன் துக்கிரித்தனத்தால் சிகரெட் குடிக்கும்படி செய்துவிட்டாயே!' என்பாள்.

எதிரில் சோபாவில் கையில் ஆங்கில நாவலும், வாயில் புகையுமாக அலட்சியத் திமிரோடு அமர்ந்திருக்கும் சதீஷைப் பார்த்தாள்.

மெதுவாக நடந்தாள். கணவனின் அருகில் சென்று நின்றாள். அலட்சியமாக நிமிர்ந்தவனைப் பார்த்து மென்மையாகச் சிரித்தாள். சடக்கென்று கீழே குனிந்து அவனுக்கு நமஸ்காரம் செய்தாள். அவன் சற்று அசைந்து கொடுத்தாலும் வெளியில் எதையும் காட்டிக் கொள்ளாமல் உட்கார்ந்திருந்தான். எழுந்தாள். அசட்டுச் சிரிப்போடு அவனருகில் அமர்ந்தாள்.

"சாரிங்க! என்னவோ தப்பாப் போச்சு! இனிமே உங்க இஷ்டப்படியே நடந்துப்பேன்! சரிதானே?"

கணவனை அணைத்துக் கொண்டு கன்னத்தில் முத்தமிட்டாள். உரிமையோடு சிகரெட்டைப் பிடுங்கித் தூர எறிந்தாள்.

அவளை வெற்றி கண்ட மகிழ்ச்சியில் அவன் தன்னுடைய வழக்கமான இறுக்குப் பிடியைப் பிடித்தான்.

ஆனால் அவளுக்குத் தெரியும், யார் வெற்றி பெற்றார்கள் என்று.

அவன் மனத்தை அவள் முற்றும் படித்து விட்டாள். ஆனால் பாவம் அவளைப் பற்றிக் கையாலாகாதவள், அடிமை என்று மட்டும்தான் அவன் நினைத்துக் கொண்டிருப்பான்.

அவள் மனத்தில் அவனைப் பற்றிய கோபுரம் இடிந்து, குப்பைத் தொட்டி இடம் பெற்றது அவனுக்கு நிச்சயம் தெரிந்திராது.

**இவர்தான் முதல்வர்:**

# நேற்றைய தளபதிகள் நாளைய தலைவர்கள்



இராம. வீரப்பன் சிறுவயதிலிருந்தே அரசியலில் புகுந்தவர். திராவிடர் கழகத்தில் தந்தை பெரியார் அவர்களிடம் பணிபுரிந்தவர். பிறகு திராவிட முன்னேற்றக் கழகத்தில் பேரறிஞர் அண்ணாவிடம் பணிபுரிந்தவர். அவர் மறைவுக்குப் பின் கலைஞரிடம் பணிபுரிந்தவர். திராவிட முன்னேற்றக் கழகத்திலிருந்து எம்.ஜி.ஆர். பிரிந்து சென்ற பொழுது அவருடனே சென்று அண்ணா திராவிட முன்னேற்றக் கழகத்தில் இன்று வரை பணிபுரிபவர். திராவிட முன்னேற்றக் கழகத்தில் இருந்த போதிலிருந்தே கலைத் துறையில் எம்.ஜி.ஆருடன் இணைந்து பணியாற்றியவர். இருபத்தைந்து வருடங்களாக எம்.ஜி.ஆருடன் தோளோடு தோள் நின்று செயல் புரிந்தவர். ஆகவே அரசியல், கலைத் துறை இரண்டிலுமே அனுபவம் மிக்கவர். கற்றுக் குட்டியல்ல; கட்சிக்காக அதிக காலம் பணிபுரிந்து கஷ்டப்பட்டு முன்னேறியவர்.

எம்.ஜி.ஆர். இறந்தவுடன் இராம. வீரப்பன்தான் அடுத்து முதல்வராக வர வேண்டுமென்று அதிகமான எம்.எல்.ஏ.க்கள் அவரிடம் வந்து தங்களுடைய விருப்பத்தைத் தெரியப்படுத்தினார்கள். ஆனால் இவரோ தம்முடைய முழு ஆதரவையும் ஜானகி அம்மையாருக்குக் கொடுத்தார். இது தலைவரிடம் இவருக்குள்ள நன்றி உணர்வையும் நல்ல மனத்தையும் காண்பிக்கிறது. வாரிசு என்பதற்கும் அரசியல் வாரிசு என்பதற்கும் வித்தியாசம் உண்டு. வாரிசு என்றால் அது மனைவியைத்தான் குறிக்கும். அதனால்தான் எம்.ஜி.ஆரின் பாரத ரத்னா விருதை ஜானகி அம்மையார் பெற்றுக் கொண்டார். ஆனால் எம்.ஜி.ஆரின் அரசியல் வாரிசு என்றால் வீரப்பன் அவர்களைத்தான் குறிப்பிட வேண்டும்.

ஆகவே இராம. வீரப்பன்தான் அடுத்த முதல்வராகத் தகுதியானவர் என்று நான் கருதுகிறேன்.

— **எஸ். வேங்கடாசலம்,**
**இராசபாளையம்.**



அண்ணா திராவிட முன்னேற்றக் கழகம் பிளவுபட்டச் சூழ்நிலையில் எம்.ஜி.ஆரின் அரசியல் வாரிசு என்று பாராட்டி ஏற்றுக் கொள்ளப்பட்ட ஜெயலலிதா அணியைத்தான் தமிழக மக்கள் ஏற்றுக் கொள்வார்கள். எனவே எம்.ஜி.ஆர். காட்டிய வழியில் மாநிலத்தில் தேர்தல் உடன்பாடாக மூன்றில் இரண்டு பங்கு ஜெயலலிதா அணிக்கும், மைய அரசிற்கு மூன்றில் இரண்டு பங்கு காங்கிரஸ் அணிக்கும் என்ற முறையில் கூட்டணி உருவானால் தமிழக காங்கிரஸ், மாநிலத்தில் நிலையான எதிர்க் கட்சியாகவும் மைய அரசில் கூடுதல் உறுப்பினர்களுடனும் விளங்கலாம். இல்லாத வரையில் தமிழக காங்கிரஸ், மாநிலத்தில் நிலையான எதிர் கட்சியாகக் கூட இல்லாமல் தி.மு. கழகத்திற்கு அடுத்த இடத்தையே பெறும்.

அ.இ.அ.தி.மு.க.வுடன் கூட்டுச் சேராமல் காங்கிரஸ் தனித்து நின்றாலும் ஜெயலலிதா அணியே நிச்சயம் வெற்றி பெறும். அப்படி ஜெயலலிதா அணியே வெற்றி பெறுமேயானாலும், ஜெயலலிதாவே பெருந்தன்மையாக விலகி நின்று நாவலரை முதல்வராகுமாறு கேட்டுக் கொள்ள வேண்டும்! அண்ணா, எம்.ஜி.ஆர். ஆகியோருக்கு அடுத்த நிலையில் வைத்து, மதித்துப் போற்றி ஏற்றுக் கொள்ளப்பட்டவரும், நடமாடும் பல்கலைக்கழகம் என வர்ணிக்கப் படுகிறவரும் நாணயமானவர் — கண்டிப்பானவர் — ஊழலுக்கு உடன்படாதவர் — கொள்கையில் உறுதி உள்ளவர் — நல்லவர் — வல்லவர் என்று மாற்றோரும் போற்றும் அரசியல் வித்தகருமான டாக்டர் நாவலர் இரா. நெடுஞ்செழியன் அவர்களே தமிழக முதல்வராக எல்லா வகையிலும் தகுதி பெற்றவர்.

— **புலவர் மு. சகாதேவன்,**
**காஞ்சிபுரம்.**

**மிக அதிகமான கல்கி வாசகர்கள் யாரைத் தமிழக முதல்வராகத் தேர்ந்தெடுத்திருக்கிறார்கள்?**

**விவரங்கள்: அடுத்த இதழில்!**

# 14 ஆம் நூற்றுண்டின் கோலாகலமான அந்நாட்களில்... தென்னிந்திய உள்ளங்களையெல்லாம் கவர்ந்த அழகர் ஸ்ரீரங்கப் பெருமானின் தெய்வத்திருமேனியை, திருமலையின் குன்றுகளினூடே பொதிந்துவைத்துப் பாதுகாத்துத் தந்தது – ஓர் 'புதர் பேழை' யின் சக்தி.

சிறிதும் மனிதாபிமானமற்ற கொள்ளைக்காரர்கள் வெறி கொண்டு தொலையிலும் நாச வேலைகளிலும் இறங்கி, தென்னிந்தியாவின் எண்ணற்ற புனித தலங்களின் கோவில்களையும் சிதைத்து விட்டனர் என்பதைச்சரித்திரத்தின் வாயிலாக அறிகிறோம். ஸ்ரீரங்கப்பெருமானின் மீது தீராத காதல் கொண்ட பக்தர்கள் அவரது திருமேனியைக் கொள்ளையர்களிடமிருந்து காக்கும் பொருட்டு, பாண்டியநாடு, சேரநாடு மற்றும் ஹொய்சால நாடு என நாடு விட்டு நாடு தூக்கிச் சென்று மறைத்து வைக்கப் பாடுபட்டனர். கடைசியாக குன்றுகளடர்ந்த திருமலையில் பெருமாளின் அருளாட்சி தடையில்லாமல் நிகழ்வதற்கேற்ற, செடி கொடிகளால் சூழப்பட்டு புதர் போல் காட்சியளிக்கும் காட்டுக்கோயிலொன்றைக் கண்டனர். ஸ்ரீரங்கனின் எழில்வடிவம் சரித்திரத்தில் அழியாப் புகழ் பெறக் காரணமாய் இருந்தது. அந்தப் **புதர்ப் பேழையே!**

ஆனல், சக்தி பாதுகாப்புப் பெட்டகங்கள் நிறைந்துள்ள இந்நாட்களில் நீங்கள் உங்கள் உடைமைகளைப் பாதுகாப்பதற்கென நாடுகளைக் கடக்கவோ இடர்ப்பாடான வழிகளை நாடவோ அவசியமேயில்லை. உங்கள் விலைமதிப்பற்ற உடைமைகளின் பாதுகாப்புக்கும் வசதிக்கும் உத்தரவாதமளிப்பது ''சக்தி''.

உங்கள் மதிப்புமிக்க உடைமைகளை உங்களுக்கு மட்டுமே தெரியும் வகையில் பேணிப்பாதுகாத்து வைக்க நீங்கள் சிரமப்படத் தேவையில்லை. உங்களுக்காக அதை சக்தி பாதுகாப்பு பெட்டகங்கள் எளிமையாக இனிமையாகச் செய்து தருகின்றன.

பாதுகாப்புக்கும் நம்பிக்கைக்கும் முழுதும் பாத்திரமான
**சக்தி பாதுகாப்புப் பெட்டகங்கள்**
**குளிர்சாதன வசதியுடன் நீங்கள் உங்கள் பாதுகாப்புப் பேழைகளைப் பயன்படுத்த. இனிய வரவேற்பு நல்கக் காத்திருப்பவை**
**சக்தி பாதுகாப்புப் பெட்டகங்கள்.**




இனி யாரும் மயிலாப்பூர் சித்திரைக் குளத்தைப் பார்த்து முகம் சுளிக்காமல் இருக்க, குளத்தில் வேக வேகமாகச் சுத்தப் படுத்தும் வேலை நடக்கிறது!

'ஜன கல்யாண்' இயக்கத்தைச் சேர்ந்த வர்கள், ஜுன் மாதம் ஐந்தாம் தேதி நற்பணியை ஆரம்பித்து வைத்தார்கள். என். எஸ். எஸ். தொண்டர்களும், பட்டாபிராம் கல்லூரி, நந்தனம் கலைக் கல்லூரி மாணவர் களும் முன் வந்து இவர்களுடன் ஒத்துழைத் தார்கள்.

இப்போது சீனிவாசா இளைஞர் அணி என்ற திருவல்லிக்கேணி தொண்டர் படையைச் சேர்ந்த வைஷ்ணவா கல்லூரி, விவேகானந்தா கல்லூரி மாணவர்கள் சிலர், வழக்கறிஞர் பட்டாபிராமன் தலைமையில், படு உற்சாகமாக வாணலியும் கையுமாய், குளத்தின் படிக்கட்டுகளில் குவியும் மண்ணை வாரிக் கொட்டிக் கொண்டிருக் கின்றனர். அவர்களின் உற்சாகம் பிறரையும் தொற்றிக் கொள்ளும் போல் இருக்கிறது! வயதானவர்களும்கூட இந்த இளைஞர் களுடன் சேர்ந்து கொண்டு வெயிலையும் பாராட்டாமல் இந்தத் திருப்பணியில் ஈடு பட்டிருப்பதைப் பார்க்க முடிந்தது.

'ஜன கல்யாண்' செயலர் ஸ்ரீதர் சொன் னார்: "ஹிந்துஸ்தான் மோட்டார்ஸ் நிறு வனத்தினர் ஓட்டுநர்களையும் கொடுத்து இரண்டு புல்டோசர்களையும் தந்துள்ளனர். பத்து நாட்களாக அவர்கள் இந்தக் குளத்தில் வேலை செய்து வருகிறார்கள். இந்த ராட்சஸ இயந்திரங்கள், இளைஞர்களுக்குப் போட்டியாக இயங்குகின்றன! சென்னை கார்ப்பரேஷன், மெட்ரோ வாட்டர், குடிசை மாற்று வாரியம், விஜிபி நிறுவனம் எல்லாம் ஒத்துழைப்புத் தருவதில் ஒன்றையொன்று மிஞ்சுகின்றன!"

"சுற்றிலும் வசிக்கும் பொது மக்களின் ஒத்துழைப்பு இருக்கிறதோ?"

"இருக்கிறது. வீட்டுக்கு ஒருவர் வந்தால் வேலை இன்னும் சுலபத்தில் முடியும். மற்ற கல்லூரி மாணவர்களும் உற்சாகத்துடன் பணியாற்ற முன்வந்தால் கூடப் போதும்!"

'ஜன கல்யாண்' ராமசாமி, காவி வேட்டி யும் வெற்றுடம்புமாக அங்கே இங்கே என்று அலைந்து கொண்டிருந்தார். அவர் முகத்தில் நம்பிக்கையும் திருப்தியும் தெரிந்தன... ஒன்றை மறுப்பதற்கில்லை. எங்கே இளைஞர் அணி அணியாகக் குளத்தில் (களத்தில்?) இறங்கி, லட்சியத்தோடு பணியாற்றுகிறார்களோ, அங்கே வெற்றி நிச்சயம்.

"இத்தனை பாடுபட்டுக் குளத்தைச் சுத்தம் பண்ணுகிறீர்கள்; தண்ணீர் நிறைந் ததும் அசுத்தம் பண்ண ஆரம்பித்து விடு வார்களே, அதைத் தடுக்க என்ன செய்யப் போகிறீர்கள்?"

"தனியார் நிறுவனங்களும், வங்கிகளும், சாலை சந்திப்புக்களில் சிறு சிறு பூங்காக் களை நிர்மாணித்துப் பாதுகாத்து வருகிறார் களே? செப்பனிடப்பட்ட இது போன்ற குளங்களையும், பொறுப்பான நபர்களை நியமித்து அழகாக நிர்வகிக்க முடியுமானால் நன்றாக இருக்கும்" என்றார் தொண்டர் ஒருவர்.

ஜெயேந்திர சரசுவதி சுவாமிகள் குளத் தைப் பார்வையிட வருகிறார் என்ற செய்தி வேறு இளைஞர் படையை இன்னும் வேக மாகப் பணியாற்றத் தூண்டியிருந்தது.

ஊற்று இருக்கலாம் என்று ஊகித்து நாலைந்து கற்களைக் குளத்தின் நடுவே குறிப்பாக வைத்திருந்தார்கள். தவிர பருவ மழையும் ஒத்துழைக்க வேண்டும்.

பல வருடங்களுக்கு முன், காஞ்சிப் பெரியவர் சென்னை வந்திருந்த போது இந்தத் திருக்குளத்தில் ஸ்நானம் செய்திருக் கிறாராம்.

— சித்தார்த்

பரதன் அச்சகத்தில் அச்சிடுபவர் வி. முரளி. பரதன் பப்ளிகேஷன்ஸ் பிரைவேட் லிமிடெட் சார்பாக வெளி யிடுபவர் வி. வைத்தியநாதன். ஆசிரியர்: கி. ராஜேந்திரன்.
முகவரி: ரேஸ்கோர்ஸ் சாலை, கிண்டி, சென்னை — 600 032. போன்: நிர்வாகக் காரியாலயம்: 4 3154 3, 4 34 157; ஆசிரியர் குழு அலுவலகம்: 4 34 14 5.
ஆண்டுச் சந்தா — உள்நாடு: ரூ. 104/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 280/—; விமானத் தபால் ரூ. 680/—.
ஆறு மாதச் சந்தா — உள்நாடு: ரூ. 52/—; வெளிநாடு: கப்பல் தபால் ரூ. 140/—; விமானத் தபால் ரூ. 340/—.

# டீ உலகில் உயர் வட்டம்

# சக்கரா டீ

உயர் வகுப்பினர் பாராட்டும்
தேநீர்ச் செல்வம் சக்கரா டீ.
சொகுசான சுவைமண, திட
குணங்களின் முழுமை
வட்டம். தேநீரிலே
சுக போகத்தின் உயர்
வட்டம்: சக்கரா டீ.

உயர் வட்ட ரசிகர்களுக்கு
உயர் வளமுள்ள தேயிலை

## சக்கரா டீ






**டாட்டா டீ லிமிடெட்**
உலகிலேயே மிகப்பெரிய டீ கம்பெனி.






பால் தேவைப்படும் போதெல்லாம், அமூல்யா இன்ஸ்டன்ட் மில்க்மிக்ஸ் கொண்டு தயார் செய்யுங்கள். வெதுவெதுப்பான நீரில் கலந்து, உங்களின் டீ அல்லது காப்பிக்கு உபயோகியுங்கள். அல்லது பாலாகவும் உபயோகிக்கலாம். இதன் ருசி உங்களுக்கு மிகவும் பிடிக்கும். காரணம் இதனை அளிப்பது அமூல். இதில் அமூல் கொண்டுள்ள சுவையும் தூய்மையும் உண்டு.

# Amulya

## Instant Milkmix

பால்-எப்போது தேவையோ அப்போது






விற்பனைக்கு விடுப்போர்:
குஜராத் கோ-ஆப். மில்க் மார்க்கெட்டிங் பெடரேஷன் லி
ஆனந்த்-388 001.

ULKA-3-88-